# அருள்

பெரியோரைத் துணைக்கொள்



ஸ்ரீ காமகோடி பீடம்
ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்






தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பரிதாபி தை (14-1-73) [கருணை 4

## நமச்சிவாய சங்கீர்த்தன லகரி

பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளையைப் பெறுந் தாய் மறந்தாலும்
உற்ற தேகத்தை உயிர் மறந் தாலும்
உயிரை மேவிய உடன் மறந்தாலும்
கற்ற நெஞ்சகங் கலை மறந்தாலும்
கண்கள் நின்றிமைப்பது மறந்தாலும்
நற்ற வத்தவர் உள்ளிருந்து ஓங்கும்
நமச்சிவாயத்தை நான் மறவேனே

— திருவருட் பிரகாச வள்ளலார்

---

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

*சந்தா அனுப்பவேண்டிய முகவரி :*

நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்
சென்னை - 600087

● மருட தன வைசியர்கள் என்றும் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் என்றும் அழைக்கப் பெறுகின்ற மரபினர்கள் தொன்று தொட்டுச் சிவப்பணி செய்தலையே தமது முதற்பெரும் கடமையாகக் கொண்டு வாழ்பவர்கள் ஆவார்கள். இமயம் முதல் குமரிவரை இவர்கள் செய்த சிவப்பணிகள் எல்லையில்லாதன.

● தானங்கள் எத்தனையோ உண்டு. அவற்றுள் வித்தியா தானம், அன்னதானம், கன்னிகா தானம் மூன்றும் மகாதானங்களாகப் பெரியோர்களால் வகுக்கப்பட்டிருக்கின்றன.

இவைகளில் அன்னதானம் விசேஷமானது. ஏன் என்ருல் அது உடனே அந்த தானத்தைப் பெற்றவனுக்கு சந்தோஷத்தையும் மனத் திருப்தியையும் கொடுக்கும்.

● எந்தச் சமயத்தின் பாலும் வேற்றுமை பாராட்டாதவர்கள் நாட்டுக் கோட்டை செட்டியார்கள். எனினும் அவர்கள் அனைவருமே சைவ சமயத்தினர். தமிழ்க் கடவுளாம் திருமுருகனுக்கே தாம் சென்ற நாடுகளில் எல்லாம் அவர்கள் கோவில் எழுப்பி இருக்கின்றனர்.

● மதுரை ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயில் ஸ்ரீ மீனுட்சி அம்மன் மூலவருக்கு 11—12—72 திங்கட்கிழமை காலையில் வைரக் கிரீட திருமுடி சூட்டுவிழாவும், தங்கக் கவசம் அணியும் விழாவும் நடைபெற்றது. தங்கக் கவசம் இத்திருக் கோயில் நிதியிலிருந்து சுமார் 2 லெட்சம் ரூபாய் மதிப்பில் செய்யப்பட்டது.

● மக்களின் நல்வாழ்க்கையில் நாட்டங் கொண்டு சமரச சன்மார்க்க நன்நெறியைப்போதித்து இறையருளை உணரச் செய்த ஜோதி ராமலிங்க அடிகளை திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் சிறப்புப் பெயரால் மக்கள் போற்றி மகிழ்ந்தனர்.

● தெய்வ வழிபாடு மிகமிக அவசியம் என உணர்தல் வேண்டும். இன்றேல், சமரசம், சன்மார்க்கம், எல்லா உயிர்களும் ஒன்று என்று பேசும் உரையாடல் யாவும் வெறும் பேச்சன்றி ஒரு செல்லாக் காசுக்கும் உதவாது என்று கூறுகிருர் ராமலிங்க அடிகளார்.

● ஒருவன் வாழ்க்கையில் அறுபது வயதுக்குள்ளாகவாவது ஸ்ரீசைலம்,வெங்கடாத்திரி (திருப்பதி), காஞ்சிபுரம், ஸ்ரீரங்கம், இராமேஸ்வரம், தனுஷ்கோடி இவைகளில் ஒன்றுக்கேனும் போகாமலிருந்தால் மறுபிறப்பில் கழுதையாகப் பிறப்பான் என்று மரீசி சுமிருதி கூறுகிறது.

● இராமேஸ்வரம் கோயில் நிர்வாகம் வழிபாடு ஆகியவற்றில் உள்ளூர் புரோகிதர்களுக்கும்,

பண்டாக்களுக்கும் எவ்வகையான உரிமையும் இல்லை.

● நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் காசிச் சத்திரத்துக்காகவும் அதன் கிளைகளுக்காகவும் இதுவரை மூலதனச் செலவாகவும் நடைமுறைச் செலவாகவும் ஐம்பது லெட்ச ரூபாய்க்கு மேல் வாரி வழங்கி உள்ளனர். இந்தத் தொகை முழுவதும் நகரத்தார்களால் மட்டுமே கொடுக்கப் பெற்றது.

● வடநாட்டிலுள்ளவர்கள் தென்னாட்டுஇராமேஸ்வரத்துக்கு வந்து வழிபாடு ஆற்றுவதையும் தென்னாட்டில் உள்ளவர்கள் காசிக்குச் சென்று வழிபாடு ஆற்றுவதையும் தங்கள் வாழ்வில் புனிதமான செயல் என்று கருதுகிறார்கள்.

● கடவுளிடம் பக்தி செய்வதானாலும் சரி, வேறு எந்தக் காரியத்தைச் செய்வதானாலும் சரி, பரிசுத்தமான மனத்துடன் செய்தால்தான் அந்தப் பக்திக்கும், செய்யும் காரியங்களுக்கும் சக்தி அதிகம்.

● எந்த நிலையில், மனிதன் தன் அறிவு உணர்ச்சிகள் செயலற்று இருக்கும் தன்மையை எய்துகிறானோ, அந்த நிலைக்குத் தூக்கம் என்று பெயர் என்று யோகஸூத்ரம் கூறுகிறது.

● அர்ஜுனனைப்பற்றிக் கூறினால் விரோதி அகலுவான். பீமஸேனனைப் பற்றிக் கூறினால் பாவம் நீங்கும். யுதிஷ்டிரரைப் பற்றிப் பேசினால் தர்மம் வளரும். அச்விநீ புத்ரர்களான நகுல ஸகாதேவர் பற்றிக் கூறினால் நோய்கள் நீங்கும்.

● இயற்கையில் வாழும் எல்லா உயிரினங்களும் தங்கள் உணவை அலைந்து திரிந்து உழைத்தே பெறுகின்றன. மனிதன் மட்டும் வெறுமனே வீற்றிருந்து உழைக்காமல் அலுங்காமல் தன் வயிற்றை நிரப்புகிறான்.

● உடல் வருந்தி உழைக்காத எல்லோரும் கட்டாயம் உடற்பயிற்சி செய்ய வேண்டும். குறைந்தபட்சம் மென்மையான பயிற்சிகளாவது செய்யவேண்டும் இல்லை என்றால் நோயால்துன்புற வேண்டியதுதான்.

● யோகாசனங்கள், சூரிய நமஸ்காரம், பிராணாயாமம், நூற்றல், தோட்ட வேலை இவை போன்று வீட்டிலே செய்யப்படும் வேறு சில தொழில்கள் ஆகியவை மென்மையான பயிற்சிகள் ஆகும்.

● திண்டுக்கல் அருகேயுள்ள சின்னாளப்பட்டியில்ஸ்ரீசுப்ரமணிய சுவாமி கோவில் 1905 ஆம் ஆண்டில் குமாரசாமி செட்டியாரால் தொடங்கப் பெற்று 59 ஆண்டுகள் கழித்து அவருடைய பேரன் சென்னை டாக்டர் ஜி.எஸ். குமாரசாமி எம்.பி.பி.எஸ். அவர்களால் முடிக்கப் பெற்றது.

● திரியகம்பமூர்த்தி இந்தியாவிலுள்ள 12 ஜோதிர் லிங்கங்களுள் ஒன்று. எனவே புனிதமானது. மகாசிவராத்திரி இங்கு பெரிய விழா. அன்று தேவகோட்டை அரு. அரு குடும்பத்தார் செலவில் ஆண்டு தோறும் லகுருத்ர அபிஷேகம் திரியகம்பமூர்த்திக்குச் செய்யப்படுகிறது.

● காஞ்சி காமகோடிபீடம் ஆசாரிய சுவாமிகள் 1971 ஏப்ரல் 29ல் திரியகம்பத்தில் சங்கரமடம் நிறுவி ஆதிசங்கர பகவத் பாதாளின் திருவுருவங்களை வைத்திருக்கிறார்கள்.

● தர்மத்தை நாம் காப்பாற்றினால் நம்மை அது காக்கிறது. நம்முடன் தொடர்ந்து என்றும் பிரியாமல் ஆபத்துக் காலங்களிலும் ரக்ஷிக்கின்றது தர்மமே ஆகையால் தினம் கொஞ்சமாவது கரையான் பூச்சி மண்குவிப்பது போல் தர்மத்தைச் செய்ய வேண்டும்.

● ஆண்கள் தீபத்தை அணைக்கக் கூடாது. பெண்கள் பூசணிக்காயை உடைக்கக்கூடாது. வாயினால் அக்னியை ஊதுதல் ஆகாது குழாய் மூலம் ஊதலாம்.

● கடையில் வாங்கும் தேன் சுத்தமானதா அல்லது போலியானதா என்பதைத் தெரிந்து கொள்ள சுலபமான முறை இது. ஒரு டம்ளர் ஜலத்தில் இரண்டு சொட்டுத் தேனை விடவும். தேன் நீரில் கரையாமல் இருந்தால் அது சுத்தமானது. நீரில் கரைந்தால் போலி.

● சுவையுள்ள உணவளிக்க அன்புள்ள தாயார் வேண்டும். ஒழுக்கமுள்ள நடத்தைக்கு நல்ல நண்பர்கள் வேண்டும். பண்புள்ள அறிவுரை சொல்ல நல்ல ஆசான் வேண்டும். தூய்மையான சிந்தனை ஏற்பட தெய்வபக்தி வேண்டும்.

● நம் வாழ்க்கையை இரு பகுதிகளாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். முதற் பகுதியில் வெற்றிபெற ஊக்கமும் சுறுசுறுப்பும் வேண்டும். இறுதியில் வெற்றியைக் காப்பாற்றிக் கொள்ள பொறுமையும் தன்னடக்கமும் தேவை.

● தங்கள் அனுபவத்திலிருந்து அறிவைப் பெறுகிறவர்கள் புத்திசாலிகள். மற்றவர்களுடைய அனுபவத்திலிருந்து அறிவைப்பெறுகிறவர்கள் தமாஷ் பேர்வழிகள். தம் அனுபவத்திலிருந்தும், பிறர் அனுபவத்திலிருந்தும் ஒன்றுமே உணராதவர்கள் முட்டாள்கள்.

● விநாயகர் நகரத்தாரின் முதற் கடவுள். மரகத விநாயகரை வைத்து வழிபட்ட பெருமை நகரத்தாருக்கே உண்டு. அதன் நினைவாகவே மார்கழி மாதத்தில் சஷ்டி திதியும் சதய நட்சத்திரமும் சேரும் நாளில் பிள்ளையார் நோன்பு கொண்டாடப் பெறுகிறது.

# ஸ்ரீ சாஸ்திர முறைகள்



ஸ்ரீகாமகோடி பீடம்
ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி
ஸ்வாமிகள்

கோவில்களின் பக்கங்களிலும் ரோடிலும், புஷ்பச் செடிகள் இருக்கும் இடங்களிலும், ஜலத்தைமுன்னால் தயார் செய்து கொள்ளாமலும், சூரிய னுக்கு எதிராகவும் கலப்பையால் உழுத இடத்திலும் ஜலத்திலும், மரத் தின் அடியிலும், மயானத்திலும் மலமூத்திர விஸர்ஜனம் செய்யக் கூடாது.

பகலில் வடக்கு முகமாயும், ராத்திரியில் தெற்கு முகமாயும் மலமூத்திர விஸர்ஜனம் செய்ய வேண்டும்.

நதியிலோ, ஜலத்திலோ இறங் கும் பொழுது முதலில் கால்களை வைக்காமல் முதலில் கையால் ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொண்டு பிறகு இறங்க வேண் டும்.

ஈரவஸ்திரத்துடன்ஜலத்திலேயே நின்று கொண்டு ஆசமனம் செய் யக்கூடாது. ஜலத்தில் ஒரு காலும் தரையில் ஒரு காலும் வைத்துக் கொண்டு ஆசமனம் செய்யலாம்.

ஈரவஸ்திரத்தை ஏழுமுறை உதறிவிட்டுக் கட்டிக் கொண் டால் உலர்ந்த வஸ்திரத்திற்குச் சமானம் ஆகும்.

ஒரு கர்மாவை ஆரம்பிக்கும் பொழுதும், முடிந்த பிறகும், மல மூத்திர விஸர்ஜனத்திற்குப் பிற கும், கொட்டாவி விட்ட பிறகும் தும்மியதற்குப் பிறகும், ஒரு கர்மாவின் மத்தியில் மற்றொரு

வருடன் சம்பாஷிப்பதற்கு முன்பும், பின்பும், சாப்பாட்டிற்கு முன்பும், பின்பும், கைகால்கள் அலம்பிக்கொண்ட பிறகும், ஜலத்தில் இறங்கிய உடனும், எச்சில் முதலியன செய்த பிறகும் ஆசமனம் செய்ய வேண்டும்.

ப்ராதக் காலத்தில் ஸ்நானம் செய்தால் மனத்திற்கு தெளிவும், உடலுக்கு அழகும், தெரிந்து தெரியாமல் செய்த பாவம், துர்ஸ்வப்பனம், துன்பம், உடலுக்கு ஆரோக்யம் உபாதைகள்முதலியவைகள் ஏற்படாது. நதியில் மூழ்கி ஸ்நானம் செய்வது உத்தமம். குளத்திலோ ஏரியிலோ ஸ்நானம் செய்வது மத்திமம். கிணற்றிலோ, வெந்நீரிலோ ஸ்நானம் செய்வது அதமம்.

வியாதியஸ்தர்கள், முதியோர்கள், குழந்தைகள் விஷயத்தில் இது பொருந்தாது. ஸ்நானம் செய்வதற்கு முன்னால் எந்தக் கர்மாவும் செய்ய அருகதை இல்லை; ஸ்நானம் செய்யும் பொழுது கங்கை யமுனை முதலிய புண்ய நதிகளை மனத்தால் நினைத்துக் கொள்ள வேண்டும்.

வியாதியஸ்தர்கள், குழந்தைகள், முதியோர்கள் ஸ்நானம் செய்ய முடியாவிட்டால் விபூதியை உடல் முழுவதும் பூசிக்கொண்டால் ஸ்நானம் செய்த பலன் உண்டு. பசுமாட்டின் தூளி உடல்மேல் பட்டாலும் ஸ்நானம் செய்த பலன் உண்டு.

வெயில் அடித்துக் கொண்டிருக்கும் பொழுது தூரல் விழுந்து நாம் அதில் நனைந்தால் கங்கா ஸ்நானம் செய்த பலன் உண்டு.

தீட்டு முடியும் பொழுது, தீட்டு கேட்டு விட்டு வந்த பொழுது, க்ஷவரம் செய்து கொண்ட பொழுது முதலிய சமயங்களில் கட்டாயமாக மூழ்கி ஸ்நானம் செய்ய வேண்டும்.

ஸ்நானம் செய்த பிறகு வஸ்திரத்தை நான்காய் மடித்து பூமியில் விழும்படி பிழிய வேண்டும். இப்படிப் பிழிவதனால் பித்ருக்களின் அருள் கிடைக்கிறது. அதே போல் ஸ்நானம் செய்த உடன் தலை மயிர்களின் ஜலம் முன்பக்கமாக விழும்படி செய்ய வேண்டும்

சலவையாளரிடமிருந்து நனைக்காமல் நேராக வந்த வஸ்திரத்தையும், ஸ்நானத்திற்கு முன் கழற்றி வைத்த வஸ்திரத்தையும் கலர்கள் உள்ள வஸ்திரத்தையும், கருப்பு சிவப்பு கரைபோட்ட வஸ்திரத்தையும் கட்டிக் கொள்

---

● *1972* ஆம் ஆண்டில் நம் நாட்டில் 700 க்கும் மேற்பட்ட விக்ரஹங்கள் களவு போயின. தமிழ் நாட்டில்தான் மிக அதிகமான விக்ரஹ திருட்டுக்கள் நடந்தன. அதே சமயத்தில் களவு போன விக்ரஹங்களில் இந்தியாவிலேயே தமிழ்நாட்டில்தான் அதிக விக்ரஹங்கள் மீட்கப்பட்டுள்ளன.

---

ளக் கூடாது. வெளுப்பாயும், பச்சை, நீலக்கரை போட்ட வஸ்திரங்களையும் மடியாய் உள்ள வஸ்திரங்களையும் உடுத்திக் கொள்ள வேண்டும். பெண்கள் விஷயத்தில் விதவைகள் மட்டிலுமே வெள்ளை உடுத்திக்கொள்ள வேண்டும். மற்றவர்கள் கலர் வஸ்திரங்கள் உபயோகிக்க வேண்டும். கருப்புப் புடவையோ அல்லது கருப்புக்கரை உள்ள புடவைகளையோ கட்டக்கூடாது.

கச்சமில்லாமலும், ஒரு வஸ்திரத்துடனும் செய்யும் நற்காரியங்கள் பயன் அளிக்காது.

சூரிய, சந்திர கிரஹண காலங்களில் ஆரம்பிக்கும் பொழுதும், முடிவடையும் பொழுதும் கட்டாயம் மூழ்கி ஸ்நானம் செய்ய வேண்டும்.

சாமானிய காலங்களில் ஸ்நானம், தியானம், ஜபம் முதலியன செய்தால் ஒரு பலன் மட்டும் உண்டு. நதி முதலியவைகளில் செய்தால் இரண்டு பலன் உண்டு. கிரஹண காலம் பாவ காலங்களிலும் செய்தால் ஆயிரம் பங்கு பலன் ஏற்படும். இதே கிரஹண காலங்களில் சமுத்திரத்தில் ஸ்நானம் செய்தால் கணக்கிலடங்காத பலன் உண்டு.

சமுத்திரத்தில் எப்பொழுதும் ஸ்நானம் செய்யக்கூடாது. அமாவாசை, பௌர்ணமி கிரஹண காலங்களில் மட்டும் செய்ய வேண்டும்.

ராமேஸ்வரத்தில் உள்ள சேதுவில் தினந்தோறும் இரவு, பகல் பாராமல் ஸ்நானம் செய்யலாம்.

கிரஹண காலத்தில் அன்னம், வஸ்திரம் முதலியவைகளில் தர்ப்பையை போடவும், போட்டு கட்டி வைக்கவும் வேண்டும். கிரஹண காலங்களில் சாப்பிடுவதும், தூங்குவதும் கூடாது.

ஞாயிற்றுக் கிழமைகளில் சூரிய கிரஹணமும், திங்கட் கிழமைகளில் சந்திர கிரஹணமும் வந்தால் மிகவும் விசேஷம்.

தக்ஷிணாயன புண்ணியகாலத்தில் 20 நாழிகைக்குமுன்பு புண்ய, கால ஸ்நானம் செய்யலாம். ஆனால் உத்தராயன புண்யகாலத்தில் உத்தராயணம் பிறந்த பிறகு 20 நாழிகைக்குள் புண்ய கால ஸ்நானம் முதலியவைகள் செய்ய வேண்டும்.

எவ்வளவு உத்தமமான புண்ய காலமாய் இருந்தாலும் ரதசதியான ஸ்திரீகள் மூன்றுநாட்களில் கோவில், வெளியில் செல்வது என்பது கூடாது. வீட்டிற்கு ஒதுக்கமாய் இருக்க வேண்டும்.

ஒரு நாளில் முதன் முதல் ஸ்நானம் என்பது எண்ணை தேய்த்த ஸ்நானமாகவோ அல்லது க்ஷவர ஸ்நானமாகவோசெய்யக்கூடாது. காலை 8 மணிக்கு மேல்தான் க்ஷவரமோ, தைல ஸ்நானமோ செய்யலாம். தீபாவளி நாள் அன்று மாத்திரம் சூரியோதயத்திற்கு முன்பு தைல ஸ்நானம் செய்யலாம். வியாதியஸ்தர்களுக்கு இந்தவிதி நிஷேதமில்லை. வாசனை தைலங்களுக்கு இந்தவிதி பொருந்தாது.

● சூரியோதயத்திற்கு முன் தூக்கத்தைவிட்டு எழுந்து விபூதி பூசிக்கொண்டு சிறிது நேரம் உட்கார்ந்து கடவுளை தியானம் செய்தல் வேண்டும்.

● காசியில் மிகச் சிறப்பான நாட்கள் மகாசிவராத்திரி, தீபாவளி, ஹிந்தி புத்தாண்டு முதலியன.

● பழங்காலத்தில் கோயில்கள் மரத்தாலும்,செங்கல்லாலும் கட்டப்பட்டன. அவை உறுதி படைத்தவை அல்ல. எனவே விரைவில் அழிந்தன. கி.பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்த பல்லவப் பேரரசன் மகேந்திர வர்மனுல் முதலில் குகைக் கோயில்கள் கட்டப்பெற்றன.

● வேல்—முருகனுக்கே உரிய ஆயுதம். இந்த ஆயுதத்தை ஏந்தும் போது முருகனுக்கு வேலன், வேலாயுதன், வேலாயுதப் பெருமான், வடிவேலன், சக்திதரன் என்ற பெயர்கள் வழங்குகின்றன.

● சூலாயுதம்,உருவமாகஉள்ள பரமேசுவரனுக்கு மட்டுமே உண்டு. அருவமாக உள்ள சிவபெருமானுக்கு சூலாயுதம் கிடையாது.

● காளி, பத்ரகாளி, யமன் ஆகியோரும் சூலாயுதம் தாங்குவர். சூலம் ஏந்திய துர்க்கைக்குச் சூலினி என்று பெயர். சூலினி மந்திரம் மிகவும் ஆற்றல் வாய்ந்தது.

● கோதாவரி ஆறு கங்கையின் மூத்த சகோதரியாகக் கருதப் படுகிறது. இதனுல் கோதாவரிக்கு விருத்த கங்கை என்ற பெயர் உண்டு.

இந்தக் காரணத்தால் இராமேஸ்வரம் இராமனுதசுவாமிக்கும்பர்வதவர்த்தனிஅம்மனுக்கும் அபிஷேகம் செய்விக்க கங்கை நீரை எடுத்துச் செல்வோர், தாம் எடுத்த கங்கையில் ஒரு சிறு அளவை கோதாவரியில் விட்டு, கோதாவரியிலிருந்து சிறிதளவு நீர் எடுத்து தம் கலத்திலுள்ள கங்கையோடு கலந்து கொள்ள வேண்டுமென்ற விதி ஏற்பட்டிருக்கிறது.

● நீரையும் கூடப் பருகாது இருக்கும் உண்ணு நோன்பு முழுமையான உபவாசம் எனப்படும். உயர்ந்த மன உறுதி கொண்டு ஆன்மாவின் உயர்வு காண உடலையும் துறக்கவல்ல தவயோகிகளுக்கும் முனிவர் பெருமக்களுக்குமே இந்த முறை ஏற்றது.

● அதிகாலையில் எழுந்து மலஜலம் கழித்து, பல் துலக்கி ஸ்நானம் செய்து, உலர்ந்த ஆடை உடுத்துக்கொண்டு சூரியன் உதயமாகும் நேரத்தில் சூரிய நமஸ்காரம் செய்ய வேண்டும். தினசரி இப்படிச் செய்வதால் உடல் வலிமையும், அழகும், பளபளப்பும் பெற்றுத் திகழும். கண்ணெளி மங்கவே மங்காது.

# பாவ புண்ணியம்



ஸ்ரீ திருமுருக
**கிருபானந்தவாரியார்**

திருவாசகம் அறிவுக் கருவூலம்; ஆனந்தத்தேன் சொரிகின்ற இனிய கற்பகம்; எண்ணில்லாத அரிய பெரிய கருத்துக்களை எடுத்து அது நமக்கு விளக்கம் புரிகின்றது; படிக்குந்தோறும் சிந்திக்குந்தோறும் பேசுந்தோறும் உவட்டாத உவகையைத் தருகின்ற செந்தமிழ்ப் பனுவல்.

இதில் ஓர் அறிய கருத்தைச் சுவாமிகள் நமக்குப் புலப்படுத்துகின்றார். புண்ணிய பாவம் என்பது செயலினால் இல்லை. அவை என்ன கருத்தில் செய்யப்படுகின்றன என்று பார்த்து முடிவு செய்யவேண்டும்.

பொய் சொல்வது பாவம் என்பது ஒரு பொதுக் கருத்து. ஆனால் பொய்மையால் புண்ணியமும் பொய்யாமையால் பாவமும்விளைவதும் உண்டு.

ஒரு பக்தன் குளக்கரையில் ஜெபமாலையைவைத்துக்கொண்டு ஜெபம் புரிகின்றான். ஒரு கொலைஞன் பசுவை வெட்டுவதற்குக் கத்தியைத் தீட்டிக் கொண்டிருந்தான். பசு கயிற்றை அறுத்துக் கொண்டு குளக்கரைப் பக்கமாக ஓடியது. கொலைஞன் அப்பசுவைக் கொல்லும் பொருட்டுத் தேடி வந்தான். ஜபம் புரிகின்ற பக்தனைப் பார்த்து, "ஐயா! பசு இந்த வழியாகப் போயிற்றா?" என்று கேட்டான்.

இப்பொழுது அந்தப் பக்தன் என்ன சொல்வது? என்பதைச் சிந்தியுங்கள்.

இதோ இந்த வழியாகச் சென்

றது என்று உண்மையைச் சொன்ஞல் அவன் பசுவைக் கொன்று போடுவான். பொய் சொன்ஞல் பூலோக காமதேனுவாகிய பசு காப்பாற்றப் பெறுகின்றது. பொய் சொல்லிப் பசுவைக் காப்பது மேலான அறமா? அல்லது மெய் சொல்லிப் பசு வதைக்குத் துணை செய்வது சிறந்த அறமா?

இங்கே பொய் சொல்லிப் பசுவைக் காப்பதுவே உத்தம தருமம் என்பது நன்கு விளங்குகின்றது. இதனைத்தான் திருவள்ளுவர்,

"வாய்மை எனப்படுவது
யாதெனில் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்"

என்று கூறியருளினுர்.

ஒரு முரடன் தன் மனைவியைத் தடியெடுத்துத் தாக்கியடிக்க முயலுகின்ருன். அபலையான அப்பெண்மணி ஓர் இடத்தில் பதுங்கி ஒளிந்து கொண்டாள். அடிக்க வந்த முரடன், அங்கு நின்ற ஒருவனை, "ஐயா! இங்கே ஒரு பெண் வந்தாளே எங்கே?" என்று வினவினுன். "அந்த அம்மாள் இந்தப் பக்கமாக ஓடிவிட்டாள்" என்று ஒரு பொய்யைச் சொல்லித் தப்புவிப்பதே உத்தம தருமம்.

ஒருவன் தான் மாண்டுபோக வேண்டும் என்று கருதி ஒரு வைரத்தை வாங்கி வைத்திருந்தான். அதனை உடைத்து உண்டு இறந்துவிடத் திட்டமிட்டான். உற்ற நண்பன் அவனையறியாது அந்த வைரத்தைக் களவாடிவிட்டான். அந்தக் களவால் அவ்வுயிர் காப்பாற்றப்பட்டது. ஆகவே இந்த இடத்தில், களவு புண்ணியச் செயலாக மாறி விட்டது.

இரவு 12 மணி நாடகம் பார்த்துவிட்டு ஓர் இளம் பெண்ணுடன் அவள்கணவன் அடுத்த ஊருக்குச் சென்று கொண்டிருந்தான். அங்கு ஒருவன் அந்த இளைஞனை அடித்துக் கொன்றுவிட்டு அப்பெண்மணியை இடர்ப்படுத்தி, அவள் அணிந்த அணிகலன்களை அபகரித்துக்கொண்டு சென்ருன். இதனை அரசாங்கத்தார் அறிந்து அப்பாதகனைத் தண்டித்தார்கள். உலகம் அவனை இகழ்ந்தது.

மற்ருெருநாள் இரவு ஒரு கணவனும் மனைவியும் நாடகம் பார்த்துவிட்டுச் சென்று கொண்டிருந்தார்கள். ஏழு காலிகள் பொல்லாத பேர்வழிகள். அக்கணவனைக் கொல்லும் பொருட்டுச் சூழ்ந்தார்கள்.

அவ்வழியே வந்துகொண்டிருந்த ஓர் உத்தம சீலர் இந்த நிகழ்ச்சியைக் கண்டு சீற்றமுற்ருர் நரசிம்மமூர்த்தி போல் பாய்ந்தார். கையில் இருந்த தடியைச்

சூழற்றினர். அந்தக் காலிகள் ஏழுபேரையும் அடித்துக்கொன்று வீழ்த்தினர். அத்தம்பதிகளைக் காப்பாற்றினர். இதனையறிந்த அரசாங்கம் அவரை அழைத்துப் பாராட்டிப் பொற்பதக்கம் வழங்கியது. "பரோபகாரி" என்ற பட்டமும் தந்தது.

முன்னே ஒரு கொலை செய்தவனுக்குத் தண்டனையும் நிந்தனையும்.

ஏழுபேரைக் கொன்றவனுக்குப் பாராட்டுதலும் வந்தனையும். என்ன காரணம்? முன்னே ஒரு கொலை செய்தவன் தீய நினைவுடன் செய்தான்; பின்னே ஏழு பேரைக் கொன்றவன், தூய நினைவோடு செய்தான். முன்னே நிகழ்ந்த நிகழ்ச்சி சுயநலத்தின் விளைவு. பின்னே நிகழ்ந்த நிகழ்ச்சி பொதுநலத்தின் விளைவு. இரண்டும் கொலையாயினும் ஒரு கொலைக்குப் பாவம் மற்றொரு கொலைக்குப் புண்ணியம். எனவே பாவ புண்ணியம் என்பது செயலினால் மட்டும் அமைவதில்லை. அதன் மூலமான அது என்ன கருத்தில் செய்யப்பட்டது என்பதைச் சிந்தித்து முடிவு கட்ட வேண்டும்.

பொதுவாகக் கொலை தீது. அதிலும் மனிதனைக் கொல்வது பெருந் தீது; மேலும் வேதம்ஓதிய வேதியனைக் கொல்வது மிகப் பெரிய தீது. வேதம் ஓதிய வேதியனும் தந்தையாக அமைய அத்தந்தையையே கொல்வது மிகப் பெருந் தீது அல்லவா?

இத்துணைப் பெரியபாவம் மிகப் பெரிய புண்ணியமாகி விட்டது.

சண்டேச நாயனார் ஐந்தாண்டில் ஆத்தி மரத்தின் நிழலில் மணலால் சிவலிங்கம் அமைத்து ஆன்பாலை அன்பால் ஆட்டிச் சிவபூசை செய்து கொண்டு வந்தார்.

அவருடைய பிதா எச்சதத்தன் வந்து சிவபூசைக்குரிய பாற்குடங்களை காலால் உருட்டி இடர்புரிந்தான். சண்டேசர் வேதியனும் தாதையுமாகிய அவன்கால்களைத் துண்டித்தார். அப்பாதகமே புண்ணியச் செயலாக மாறியது. பாதகத்திற்குப் பரிசாக அவர் முன்சிவபெருமான் தோன்றி சண்டேசபதத்தையும், தாமணிந்த கொன்றை மாலையையும் வழங்கியருளினர். இந்த அரிய இனிய கருத்தை நமது மணிவாசக அடிகளார் கூறுகின்றார்.

"தீதில்லை மாணி சிவகருமம்
சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதை
தனைத் தாளிரண்டும்
சேதிப்ப ஈசன் திருவருளால்
தேவர் தொழப்
பாதகமே சோறு பற்றினவா
தோணோக்கம்"

உலகம் தீது என்று கூறுகின்ற ஒன்று இங்கு தீதில்லை யாகிவிட்டது.

"தீது இல்லை"

பாதகமே புண்ணியமாகிவிட்டது; இது என்ன அதிசயம்? என்று கூறி வியப்புறுகின்றார்.

● காஞ்சிபுரம் ஸ்ரீசக்கர வடிவமாக அற்புத வடிவில் அமைந்துள்ளது. காஞ்சியை நிர்மாணித்த பிறகு அந்தச் சக்கரத்தில் பிந்துஸ்தானமாக ஸ்ரீகாம கோடி பீடம் ஸ்தாபனம் செய்யப் பட்டது.

● சுயநலம், சுயகௌரவம் சுய சிந்தனை ஆகியவற்றைக் காத்துக் கொள்ளும் பொறுப்பு அவரவர்களுக்கே உண்டு. அடுத்தவர்கள் அவற்றை ஒரு நாளும் நமக்குக் காத்துத் தர முடியாது.

● உலக வழக்கில் மக்கள் உயர்த்திப் பேசும் தேவி கோயில்கள் 3. அவை காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி, காசி விசாலாட்சி ஆலயங்களாம்.

● காஞ்சி ஸ்ரீதேவி காமாக்ஷியைத் தரிசிப்போர் தீர்க்கமான ஆயுளைப் பெற்று, புத்திர பௌத்திர விருத்தியுடையவராய் எல்லாச் சித்திகளும் கைவரப் பெற்று இம்மையில் வாழ்வாங்கு வாழ்ந்து மறுமையில் பிறவித் துன்பம் நீங்கி அம்பிகையின் திருவடிப் பேற்றைப் பூரணமாக அடைவர்.

● மராட்டியருக்குத் தலைமை தெய்வம் விநாயகர். அவர்களுடைய தேசியத்திருவிழா கணேஷ் சதுர்த்தி.

● சிவபெருமானைவிட முருகன் எளிதில் அருள் வழங்குவான். அதனாலேயே நகரத்தார்கள் ஏனைய தெய்வங்களைவிட முருகனிடத்தில் தனித்த ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள்.

● உயிர்களிடத்தே நாம் காட்டும் அன்பும், உணர்ச்சியும் அருள் இரக்கங்களும் இறைவனைப் போல் பயன் கருதாததாய் இருத்தல் வேண்டும் என்று கூறுகிறார் வள்ளலார்.

● தமிழ்மொழியில் உள்ள எல்லாப் புராணங்களும், இதிகாசங்களும் கிட்டத்தட்ட ஆதியில் வடமொழியில் இயற்றப் பெற்றவை. ஆனால் பெரிய புராணம் அப்படிப்பட்டதன்று அதற்கு மூலம் தமிழ்மொழி. தமிழ் மொழியில் உள்ள இதனை 'உபமன்னியு பக்த விலாஸம்' என்று வடமொழியில் பிற்பாடு மொழி பெயர்த்திருக்கிறார்கள்.

● எல்லாம் வல்ல கண்கண்ட தெய்வமான கலியுக வரதன் சபரிமலை ஸ்ரீ ஐயப்ப சுவாமி பரம் பொருளின் திருநாமங்களை நித்தம் நினைந்து உருகி, படித்துத் தியானிப்பவர்கள் மன நிம்மதியான நல்வாழ்வை அடைவார்கள்.

● யோகாசனப் பயிற்சிகள் செய்யும்போது மலஜலம் வயிற்றில் தங்கி இருக்கக் கூடாது. அவைகளை வெளியேற்றிய பின்னரே தொடங்க வேண்டும். பொதுவாக உடற்பயிற்சி செய்ய ஏற்றகாலம் அதிகாலையும், மாலையும் ஆகும்.

# ஆத்ம ஞானம்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

ஆபிள் பழத்தைச் சாப்பிட்டால்தான் அதன் ருசியை அறிந்துகொள்ள முடியுமே யொழிய அந்த ருசியைப்பற்றி மற்றவர் எவ்வளவு எடுத்துக் கூறினாலும் அதை அறிந்துகொள்ள முடியாது. அதுபோன்று பிரம்மனை சுவானுபூதியில் தெரிந்து கொள்ள வேண்டுமேயொழிய வெறும் சாஸ்திர ஞானத்தால் மட்டும் அறிந்து கொள்ள முடியாது.

ஈசுவரன், ஜகத், ஜீவன் இவை யாவும் பரப்பிரம்மத்தினிடமிருந்தேதான் வந்தவை. பரப்பிரம்மத்திடத்திலேதான் நிலை பெற்றும் நிற்கின்றன. பரப்பிரம்மமேதான் தனது சக்தியால் இம்மூன்றுமே ஆயிற்று. எனினும் பரப்பிரம்மன் இரண்டற்ற ஏக வஸ்துவாக தனித்தும் நிற்கின்றது. இவ்விஷயம், பரம இரகசியம், அற்புதம், ஆச்சரியம், நம்பத்தகாதது, எனினும் உண்மையே.

வெளிநோக்கிச் செல்லும் பொறிகளையும் மனதையும் அடக்கி உள்முகமாகத் திருப்பினாலன்றி ஆத்மனை அறிய முடியாது.

பரம்பொருளின் தத்துவத்தை அறிவதே கடினம். இன்னும் கடினம் பரம்பொருளை அடைய ஆத்மீக சாதனை செய்வது. எனினும், இதய சுத்தியும், தீவிர வைராக்கியமும், ஆத்மனை அறிய தீவிர இச்சையும், சாதனையில் ஊக்கமும் சக்தியும் இருக்கும். சாதகனுக்கு ஒன்றுமே கடினமில்லை. அவன் எல்லாவற்றையும் திறம்பட முடித்து இலக்ஷியத்தையும் எளிதில் அடைந்துவிடுவான்

பிரம்மனுடன் உனக்கு ஐக்கியம் ஏற்பட்டால்தான் மாயையின் பிணைப்பிலிருந்து நீ விடுபடுவாய்.

மன அமைதி, தன்னடக்கம், பொறுமை, முதலியவை ஞானத்திற்கு ஹேதுக்களாகும்.

சுருதிகளைக் கேட்டல், கேட்டதைச் சிந்தித்தல், பிரம்மனை தியானித்தல் ஆகியவைகள் ஆத்ம ஞானத்திற்கு இன்றியமையாதவைகளாகும்.

உண்மையில் நீ பிரம்மனே. இதை முதலில் உன்னில் கற்பனை செய்துகொள். இதுதான் பிரம்ம பாவனை. பின் இடையருது இந்தப் பாவனையில் நிலைத்திருப்பாயாகில் நீ அந்த பிரம்மமே ஆகிவிடுவாய்.

நம்முள் எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கும் சைதன்ய வஸ்துவினுலேதான் நிகழ்ந்த காரியத்தின் நினைவு நமக்கு ஏற்படுகின்றது. ஆத்மன் இல்லையேல் நினைவுமில்லை. ஏனெனில் இந்த ஆத்ம சைதன்யம்தான் நம்மில் உள்ள ஜடவஸ்துக்கள் அனைத்திற்கும் பிரகாசத்தைத் தருகின்றது. மனதில் பதிந்துள்ள சூக்ஷ்மமான — செயலற்ற சம்ஸ்காரத்திற்கும்உணர்ச்சியைத் தந்து அதைச் செயலில் தூண்டுகிறது.

பசுவில் இருக்கும் ஆத்மனும், துஷ்டனில் இருக்கும் ஆத்மனும், ஞானியுள்ளிருக்கும் ஆத்மனும், ஏழைக் குடியானவனுள்ளிருக்கும் ஆத்மனும், அரசனுள்ளிருக்கும் ஆத்மனும் ஒருவனே. அவனே தான் யாண்டும் யாவற்றிலும் அதிஷ்டானமாகவும இருப்பவன்.

ஆத்மன் ஒளிப்பிழம்பு. அதுவே உலகத்திற்குப் பிரகாசத்தை அளிக்கின்றது ஜீவனின் அஞ்ஞான இருளையும் நீக்குகின்றது.

எல்லையற்றது, மாருதது, இந்திரியங்களுக்கு எட்டாதது, பரிபூரணமானது, அறிவுமயமானது, ஆனந்தமயமானது இவையாவும் ஆத்மனின் விசேஷத்தன்மைகளாகும்.

உனக்கு ஆத்மனுடன் ஐக்கியம் ஏற்படுமாகில் பேரானந்தமும் பரம சாந்தியும் அமரத்வமும் நிச்சயமாகக் கிட்டும்.

உனது ஆத்மனேதான் உனக்கு உண்மையான, மேலாம்,ஒப்பற்ற ஆனந்தத்தை அளிக்க வல்லது.

ஒவ்வொருவனும் அவனவன் உள்ளில் அந்தர்யாமியாய் வசிக்கும் பரம்பொருளிடத்தில் அத்தியந்தப் பிரியத்தைச் செலுத்துகின்ருன். இதிலிருந்து ஆத்மன் அல்லது அந்தராத்மா ஆனந்தமயம், ஒவ்வொருவனுக்கும் மேலாம் ஆனந்தத்தை வர்ஷிக்கின்றது என்று தெரிய வருகிறது.

பூதாகாசத்தைப் போல் சிதாகாசமும் ஒன்றிஞலும் விகாரப் படுவதில்லை.

கடவுள் உனக்கு மிகவும் அருகிலுள்ளார். உனது மூச்சையும் விட சமீபத்திலுள்ளார். கை கால்களைவிட பக்கத்திலுள்ளார். அவர் உன் இதயத்திலேயே வசிக்கின்ருர், அவர்தான் உனது ஆத்மன்.

# பழகத் தெரிய வேண்டும்



ஸ்ரீ வி. ஜி. பன்னீர்தாஸ்

நாம் எவ்வளவுதான் எளியவர்களாக இருந்தாலும் வசதியுள்ளவர்களாக இருந்தாலும் மற்றவர்களுடன் அன்பாகப் பழகத் தெரிய வேண்டும்.அப்படி இல்லாவிட்டால் நமக்கு நண்பர்களே இருக்கமாட்டார்கள். அதோடு மட்டுமல்ல நமக்கு வேண்டியவர்களே இருக்கமாட்டார்கள். நாம் தனிமையில் இருக்கும் துன்பமயமான எதிர்காலம் ஏற்படும்.

சிலருக்கு ஏகப்பட்ட நண்பர்கள் இருக்கிறார்கள். சிலருக்கு இரண்டொருவரை மட்டுமே தெரியும். சிலருக்கு நண்பர்கள் வெகு குறைவாக இருப்பார்கள். இதற்குப் பழகத் தெரியாதது தான் காரணம். நமக்குப் புதியவர்கள் ஆனாலும் நாம் அவர்களுடன் அன்புடன்,நட்புடன் பழகத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்தப் பழக்கத்தை நம் வீட்டில் உள்ள பிள்ளைகளுக்கும் சொல்லித் தர வேண்டும். அப்போதுதான் நம் பிள்ளைகளின் எதிர்காலம் நாம் வியக்கும் அளவுக்குப் பிரகாசமாக இருக்கும்.

நாம் எப்போதும் எந்தக்கவலைகள் இருந்தாலும் அவைகளை மறந்துவிட்டுச் சந்தோஷமாக இருக்க வேண்டும். எல்லாருடனும் மகிழ்ச்சியோடு சிரித்துப் பேசவேண்டும். சிரித்துப் பேசுகிறவர்களையே எல்லாரும் விரும்புகிறார்கள். உம்மென்று முகத்தை வைத்திருப்பவர்களைப் பொதுவாக யாரும் விரும்புவதில்லை.

நம்மை மற்றவர்கள் விரும்ப வேண்டும் என்று பொதுவாக நாம் நினைக்கிறோம். அதைப் போலவே மற்றவர்களும் விரும்புகிறார்கள். இது இயற்கை.

எனவே மற்றவர்களை, நாம் வெறுக்காமல் அவர்களை விரும்பி அவர்களை நாம் பாராட்டிப் பேச வேண்டும். அவர்களிடம் உள்ள நல்ல குணங்களை நாம் பாராட்ட வேண்டும். அவர்களிடம் ஏதாவது கெட்ட குணம் இருந்தால் அதை நாம் பெரிதாக மதிக்காமல் அவர்களுடைய நல்ல குணத்தையும், நல்ல செய்கைகளையும் பாராட்டி நாம் அடிக்கடி பேச வேண்டும். அப்படிச் செய்வதால் அவர்களுடைய கெட்ட குணம் மாறி இன்னும் மிக நல்லவர்களாகி விடுவார்கள், இது உண்மை. உலகில் பிறக்கும் போதே எவரும்கெட்டவர்களாக கொலைகாரர்களாகப் பிறப்பதில்லை. அவர்களுடைய பழக்க வழக்கங்களாலும், நண்பர்களின் சூழ்நிலையிலுமே இன்றைக்கு மிகப் பெரும்பாலானவர்கள் கெட்டுப் போனதற்கு காரணம்.

நாம் ஒரு சிறிய வேலையைச் செய்து முடித்தாலும் மற்றவர்கள் பாராட்டினால் நமக்குஎப்படி மகிழ்ச்சி ஏற்படுகிறது. அதை நினைத்து, நினைத்து நாம் மேலும் மகிழ்ச்சி அடைகிறோம். அதனால் நமது உள்ளம் மகிழ்ச்சி அடைவதோடு, நமது உடல்நலமும் நன்கு பராமரிக்கப்படுகிறது. நமக்குத் தோன்றுவது மாதிரியே நாம் மற்றவர்களைப் பாராட்டினால் அவர்களுக்கும் அப்படித்தானே இருக்கும்.

மற்றவர்களிடம் நாம் இரக்கம் காட்ட வேண்டும். மற்றவர்கள் பிரச்னைகளை அவர்கள் சொல்லும் போது நாம் அனுதாபத்துடன் கேட்க வேண்டும். உடனே உங்கள் பிரச்னைகளை அவர்களுக்குச் சொல்லக்கூடாது. வாய்ப்புவரும் போது உங்கள் பிரச்னைகளை அவர்களிடம் சொல்லலாம்.

மற்றவர்கள் நமக்குச் செய்யும் சிறிய உதவிகளுக்கும் 'நன்றி' என்று ஒரு வார்த்தையாவது நாம் சொல்லி வைக்க வேண்டும். இப்படிச் செய்வதால் நம் பண்பாடு வளரும்; நல்ல எண்ணங்கள் தோன்றும்.

மற்றவர்களுக்கு உதவி செய்ய வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். கிடைக்கும் எந்த சிறு வாய்ப்பையும் நாம் கோட்டை விட்டுவிடக் கூடாது. நாம் பலன் கருதாமல் பிறருக்கு உதவி செய்யவேண்டும். மற்றவர்கள் கேட்பதற்கு முன்பாக நாமாக உதவி செய்திட வேண்டும். இப்படிச் செய்தால் நாம் எதிர்பார்க்கிற அளவுக்கு மேல் நமக்கு நல்ல பலன் நிச்சயம் கிடைக்கும். நாமும் நலமுடன் இருந்து கொண்டு மற்றவர்கள் நலமுடன் வாழ உதவி செய்தவர்கள் ஆவோம்.

மற்றவர்களுக்கு நாம் உதவிட எந்த நேரமும் தயார் நிலையில் இருக்க வேண்டும். நாம் செய்யும் உதவி நல்ல மனத்துடன் மனப்பூர்வமாகச் செய்யும் உதவிகள் கூட நாம் நினைக்கும் நல்ல பலன் தராமல் நமக்கே அதாவது

உதவி செய்திட்ட நமக்கே சில சமயம் துன்பத்தை விளைவிக்கலாம். மனச்சோர்வை உண்டாக்கலாம். இவையெல்லாம் தற்காலிகமானவையே தவிர நம் மனத்தை நிரந்தரமாக துன்பத்தில் மூழ்கடிக்காது. இதை நாம் பெரிதாகக் கருதி, நாம் உதவி செய்வதை நிறுத்திவிட்டால் நம்மை நாமே ஏமாற்றிக் கொண்டு, யாருக்கு உதவி செய்தாலும் வீணாகிவிடுகிறதே என்று கவலைப்பட்டு நம் எதிர்காலத்தை நாமே வீணாக்கிக் கொள்கிறோம். இது மிகத்தவறு.

நாமே வலியச் சென்று உதவிகள் செய்வதால் நட்பு வளரும். நமக்கு மிக நல்ல நண்பர்கள் அதிகமாவார்கள். நாம் எண்ணியதற்கு மேலே மிக அதிகமான பலன் ஏற்படும்.

நம் இந்தியா, அதிக ஜனத்தொகை உள்ள ஒருபெரிய நாடு. ஆயுத பலத்தைக் காட்டிலும் ஆள் பலம் அதிகமுள்ள மிகப் பெரிய நாடு. ஆனால் நம்மில் பெரும்பாலோர் மற்றவர்களுக்கு உதவிகள் செய்யாமல் வீணாகிக் கொண்டிருக்கிறோம்.

நாம் மற்றவர்களுக்கு வலியச் சென்று உதவிகள் புரிந்து எல்லாரையும் நண்பர்களாகப் பெற்று அவர்களையும் உயர்த்தி நாமும் வளர்ந்துவிட்டால் ஏழை இந்தியா சுபிட்ச இந்தியாவாக வறுமை ஒழிந்து வளமுடன் திகழும் நாள் அதிக தூரத்தில் இல்லை.

நாம் நல்ல நண்பர்களை நிறையப்பெற்று நல்லமுறையில் பழகி, நாம் நலமுடன் வாழ்வோமாக.

● ஞாபக சக்தி வளரவும் உடற்பலம் அதிகரிக்கவும், மூளை யின் பலம் நன்ருக இருக்கவும் எண்ணெ ஸ்நானம் வாரம் ஒரு முறை அவசியம் செய்யவேண்டும்

● உடல் பருமனுக உள்ள வர்கள் தினசரி காலையில் ஒரு ஸ்பூன் தேன் சாப்பிட்டு வர வேண்டும். எதனுடனும் கலக் காமல் வெறும் தேன் மட்டும் சாப்பிட்டு வந்தால் விரைவில் அவர்கள் எடை குறையும்.

● இதய பலவீனமுள்ளவர் கள் தினசரி இரவில் படுக்கைக்குச் செல்லும்போது ஒரு ஸ்பூன் தேன் ஒரு டம்ளர் தண்ணீர், சிறிது எலுமிச்சம்பழசாறு இவற்றுடன் சேர்த்து சாப்பிட்டு வந்தால் இதயம் பலம் பெறும்.

● சரீரத்தில் உணர்ச்சியுடன் கோவிலுக்குச் செல்லக் கூடாது. சரீர உணர்ச்சி என்பது சிறுநீர் முதலியன கழிக்க ஏற்படும் உணர்வு ஆகும்.

● திருமால் கோயிலுக்குச் சென்று ஸ்ரீ பாத தீர்த்தம் சடாரி, துளசி இவைகளை ஏற்றுக் கொள் ளாமல் வரக் கூடாது.

● துன்புற்றோர்களைக் கண் டாலும், அவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டாலும் "ஐயோ" என்று உள்ளம் தானுகவே கனிய வேண்டும். பிற மதங்களை எள்ளி நகையாடவும் குறை கூறிப் பேசு வதும் கூடாது.

● வேத வியாசருடைய தந் தையான ஸ்ரீ பராசர பகவானுல் மைத்திரேயர் என்பவருக்காக விரிவாகக் கூறப்பட்ட விஷ்ணு புராணம் என்பது வைணவக் கொள்கைகள் சிறப்பாக அமைந்த புராணமாகும். இதனை புராணரத்தினம் எனவும் அழைப் பார்கள்.

● பாரதப் போரில் மயங்கி இருந்த அருச்சுனனைத் தெளி விக்கக் கண்ண பிரானுல் திருவாய் மலர்ந்தருளப்பட்ட நூலுக்கு பகவத் கீதை எனப் பெயர். இப் பகுதி மஹாபாரதத்தில் பீஷ்ம பருவாவில் 25 வது அத்தியாயம் துவங்கி 42 வது அத்தியாயம் வரை உள்ளது.

● நெல்லிப் பொடியில் தேன் அல்லது நெய்விட்டுக் குழைத்து இரவில் உணவிற்குப் பின் உண்டு வர முதுமையிலும் கண்பார்வை மங்காது காக்கப்படும். கண்களில் தோன்றிய மருக்கள் மறையும்.

● பிராம்மணன், பசு, கிழவன், கர்ப்பிணி சுமை தூக்கி வருபவன், மெலிந்தவன் இவர்களுக்கு யாரும் வழிவிட வேண்டும்.

● காது குத்தும் சமயம் அங்கே சில நாடிகள் பாதிக்கப் பெறுகின்றன. அது குழந்தை களுக்கு வருங்காலத்தில் பக்தி, ஞான வைராக்கியாதிகள் வளர வும் ஆத்ம ஞானத்தில் திளைக்க வும் சாதகமாக அமைகிறது. இத ஞல்தான் இந்துக்கள் அனைவரும்

தங்கள் குழந்தைகளுக்கு சிறு வயதில் காது குத்துகிறார்கள்.

● விச்வ ஹிந்து பரிஷத் என்கிற ஸ்தாபனம், ஹிந்துக்களில் பல சமயக் கொள்கைகளின் அடிப்படை ஒற்றுமையை வளர்ப்பதற்கும், ஹிந்து சமூக ஒற்றுமையை வளர்ப்பதற்கும் ஏற்பட்டது.

● ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர் வேத மார்க்கமாக ஆறு வகை உபாஸனைகளை ஏற்றுக் கொண்டதாகச் சங்கர விஜயங்கள் கூறுகின்றன. அவை — சைவம், வைஷ்ணவம், சாக்தம், ஸௌரம், காணபதம், கௌமாரம் என்பவையாகும்.

● நவ நரஸிம்மர் எழுந்தருளியுள்ள எழில்மிகு புண்ய க்ஷேத்திரமே அஹோபிலமாகும். புராணப் பெருமையும் வரலாற்று முக்கியத்துவமும் வாய்ந்த அஹோபிலத்தில் ஸ்ரீ ராமபிரான் நரஸிம்மனை வணங்கி வழிபட்டார் என்பது புராண வரலாறு.

● பிறரைக் கண்டு பொறுமைப் படுகிறவன், மற்றவரை வெறுக்கிறவன், எவ்வளவுகிடைத்தாலும் திருப்தி இல்லாதவன், எதற்கும் கோபம் கொள்பவன், எப்போதும் ஏதாவது சந்தேகமுடையவன், வேறொருவருடைய பணத்தைக் கொண்டு வாழ்கிறவன் ஆகிய இந்த ஆறு பேருக்கும் துன்பம் ஒரு நாளும் தீராது.

● அனைவரையும் சந்தோஷப் படுத்துபவன் தானும் சந்தோஷமாகத்தான் இருப்பான். ஆகையால் எப்போதும் தானும் சந்தோஷமாய் இருந்துகொண்டு அனைவரையும் சந்தோஷப்படுத்துபவன் ராமன். எல்லாரும் அழிவில்லாத ஸ்வரூபமான ராமனையும் அவன் நாமாவையும் நினைத்து சொல்லி, அழிவில்லாத ஆனந்தத்தை அடைவோம்.

● கொதிக்கும் நீர் ஒரு டம்ளரில் ஒரு தேக்கரண்டி தேன்விட்டு நன்றாகக் கலக்கிக் குடிக்கவும். பத்தே நிமிஷங்களில் வயிற்றுவலி குணமாகிவிடும்.

● தினசரி இரவில் படுக்கச் செல்லும்முன் இரண்டு பூவன் வாழைப்பழங்கள் சாப்பிட்டு பால் பருகிவந்தால் மலச்சிக்கல் ஏற்படாது.

● இரவில் தேவைக்குக் குறைவாகவே உண்ண வேண்டும். காலங்கடந்து அகாலத்தில் சாப்பிடக் கூடாது. அப்படிச் சாப்பிட்டால் அஜீரணமும், கெட்ட கனவுகளும் ஏற்படும்.

● காலில் செருப்பில்லாமல் நடக்கவே கூடாது. நோயாளிகளின் எச்சிலை மிதிக்க நேரும். மேலும் வெயிலினால் ஏற்படும் உஷ்ணம் சரீரத்தில் சேராமல் தடுக்கலாம்.

● உடலும் உள்ளமும் ஆரோக்யமாக இருக்க செயலில் சுத்தமும், சிந்தனையில் நல்ல நினைப்பும் அவசியம் தேவை.

● தமிழ் நாட்டில் 49 இடங்களில் 96 விக்ரஹங்கள் திருட்டுப் போயின. உத்தரப் பிரதேசத்தில் 45 விக்ரஹக் களவுகள் நடந்தன. ராஜஸ்தானிலும் ஆந்திராவிலும் தலா 38க்கும் மேற்பட்ட விக்ரஹத் திருட்டுக்கள் நடைபெற்றன.

● திருமால் முன்பு தோப்புக்கரணம், கன்னத்தில் அடித்துக் கொள்ளுதல், தன்னையே தான் சுற்றிக் கொள்ளுதல் முதலியவைகளைத் தவிர்க்க வேண்டும்.

● நாம் எவ்வளவு காலம் வாழ்வோம் என்பது முக்கியமல்ல. எப்படி வாழ்கிறோம் என்பதே முக்கியம். ●



திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த
புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்
5-3-72உ இலட்சதீப விழாவில்
பழநி பரிமள விலாஸ்
S.சித்தநாதன் சன்ஸ் S.குருசாமி அவர்களுக்கு
சதானந்த விபூதி சக்கரவர்த்தி
என்ற பட்டத்தை வெள்ளியினால் பொறித்த கேடயம் கொடுத்தபோது
எடுத்த படம்.

# கடவுளும் பக்தியும்



மகாத்மா காந்திஜி

"கடவுள் என்றால் ஆள் அல்ல. அனைத்திலும் வியாபித்து நிற்கும் சர்வ வல்லமையுள்ளதோர் சக்தியேயாகும். அதைத் தம் இதயத்தில் ஏற்றுக் கொள்ளுகிறவர்கள் அதி அற்புதமானதோர் ஆற்றல் உண்டாவதைக் காண்பார்கள்."

"சகல சக்திகளுக்கும் அஸ்திவாரமான சக்தியே கடவுள் என்பதை மட்டும் நாம் மறந்து விடலாகாது. மற்றச் சக்திகள் எல்லாம் உலகாயத சக்திகள். கடவுளா — அதுதான் ஜீவசக்தி; சர்வ வியாபகமானது. அதனால் யாராலும் அறிய முடியாதது"

"கடவுளை அறிவால் அறிய முடியாது. அறிவு கொஞ்சதூரம்தான் விஷயத்தை விளக்கிக் காட்டும். கடவுளை நம்பிக்கை மூலமாகவும், நம்பிக்கையால் பெறும் அனுபவம் மூலமாகவும்தான் அறிய முடியும்."

"கடவுள் எல்லாம் வல்லவர், யாராலும் அறிய முடியாதவர். இலட்சக்கணக்கான நாமங்களையுடையவர். அவரை ஹிருதய கமலங்களில் கோயில் கொள்ளச் செய்யுங்கள்."

"கடவுள் என்பது ஓர் உயிருள்ள சக்தியாகும். நம்முடைய உயிர் அந்தச் சக்தியின் ஓர் அம்சமேயாகும். அந்தச் சக்தி நம்முடைய உடம்பில் வசித்து வருகின்றது. ஆனால் அதைக்கொண்டு அந்தச் சக்தியைச் சரீரம்தான் என்று சொல்லிவிடக்கூடாது. அந்த மகத்தான சக்தியை இல்லை என்று கூறுகிறவர்கள் அதன் உபயோகத்தை இழந்துவிடுகிறார்கள். அவர்கள் சுக்கான் இல்லாத கப்பலை ஒப்பார்கள்."

"ஒரு மனிதனை நல்லவர் என்று கூறுகிறோமே அந்த மாதிரியாக அல்ல. நான் கடவுளை நல்லவர் என்று கூறுவது மனிதர் ஓரளவுதான் நல்லவர். அதாவது அவரிடம் தீமை குறைவு, நன்மை அதிகம் என்பதே பொருள். ஆனால் கடவுளோ — அவர் முற்றிலும் நல்லவர் அவரிடத்தில் தீமை என்பதே கிடையாது."

"கடவுளுடைய சட்டங்கள் இரும்பை விட பலமானவை அவற்றை மீறிவிட முடியாது."

"எல்லோரும் என்னை விட்டு விட்டுப் போய் விட்டாலும் கடவுள் அப்படிச் செய்யமாட்டார். அவர் எனக்கு எப்பொழுதும் வழி காட்டிக்கொண்டே இருப்பார். என்றைக்கு மக்களுடைய மனத்தில் இறைவன் ஆட்சி செய்கின்றானோ அன்றுதான் அவர்கள் தங்கள் கோபத்தை அணுவளவும் இல்லாமல் ஒழிக்க முடியும்."

"மனிதன் தானே தன் வாழ்க்கையை உருவாக்கிக்கொள்ள முடியும் என்பது அரைகுறையாகத்தான் உண்மையாகும். கடவுள் தம்முடைய நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காக நம்முடைய காரியங்களில் நமக்கு எவ்வளவு அதிகாரம் அளிக்கின்றாரோ அந்த அளவுக்குத்தான் நாம் நம்முடைய வாழ்வை உருவாக்கிக் கொள்ள முடியும்"

"சாதாரணமாகக் கவனிக்கும் பொழுது எது அசாத்தியம் என்று தோன்றுமோ அது கடவுளுடைய உதவியால் சாத்தியமாகிவிடும். நான் எப்பொழுதும் கடவுள் காட்டுகின்ற வழியையே பின்பற்றி வருகின்றேன் இதை வெறும் மயக்கம் என்று பிறர் கூறக்கூடும். மயக்கமாயிருந்தாலும் எனக்கு அது மதிக்க முடியாத பொக்கிஷமேயாகும்."

"கடவுள் என்று நாம் கூறும் சக்தி உயிர் உள்ள சக்தி. அதன் விதியைப் பின்பற்றி நடந்தால் தான் கடவுளைக் காண முடியும். கடவுளுடைய விதியை அறிவதற்கு அதிகமான சிரமம் மேற்கொள்ள வேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும்."

"நான் கடவுளை நேரில் காணாவிட்டாலும் கடவுள் இருக்கிறார் என்னும் விஷயத்தில் நான் அசையாத நம்பிக்கையுடையவன்."

"கடவுளை அறியாத அறவாழ்க்கை ஜீவனற்றது. அத்தகைய அறவாழ்க்கையால் எவ்விதப் பயனும் உண்டாகாது. கடவுளுடன் சேர்ந்த அறங்கள் உயிருள்ளவை. அவை நம்மோடு சேர்ந்து நம்மை உன்னத நிலையில் கொண்டு சேர்க்கும்."

"நாம் கடவுளுடைய கைப் பொம்மைகளே! அவர் நம்மைத் தம்முடைய இஷ்டம்போல் ஆட்டி வைக்கிறார். நாம் செய்யக்கூடியதெல்லாம் அவருடைய ஆட்டத்திற்கு இடையூறு விளைவியாமல் இருப்பதும், அவருடைய சித்தம் போல் நடப்பதுமே யாகும்."

"மனிதன் சிற்றறிவுடையவனாதலால் கடவுளை பரிபூரணமாகச் சிந்தித்து விடமுடியாது. ஆதலால் ஒவ்வொருவரும் தத்தமக்குத் தெரிந்த சிறந்த முறையில் சிந்திக்கலாம். சிந்தனை மட்டும் உள்ளத்தைத் தூய்மை செய்வதாகவும் உயர்த்துவதாகவும் இருக்க வேண்டும்."

"எதனிடம் பக்தி செலுத்துகிறோமோ அதைத்தவிர வேறு எதையும் மனத்தால் பார்க்கவோ கேட்கவே முடியாதபடி மனத்தின் கண்களையும் காதுகளையும் மூடிக்கொள்வதே உண்மையான தியானமாகும்." ●

# விசாலாட்சி கோவில்

காசியில் விசாலாட்சி கோவில் விசாலாட்சி கட்டம் என இப்போது வழங்கும் பகுதியில் கங்கைக் கரையருகே குறுகிய தெரு வொன்றில உள்ளது. முன்னுளில் இப்பகுதி மீர்காட் என்ற பெயரில் வழங்கி வந்ததாகத் தெரிகிறது.

காசியில் அன்ன பூரணிக்குக் கோவில் ஏற்பட்டது பதினேழாம் நூற்ருண்டில் தான் என்று கூறுகின்றனர். விசாலாட்சி அம்மனுக்கும் அக்காலத்திலேயே கோயில் உண்டாகியிருக்கக்கூடும். அப்போது கட்டப்பெற்றகோவில் மிகச்சிறு அளவில்,பண்டாக்களின் தனிச் சொத்தாக அமைந்திருந்தது.

விசாலாட்சி கோவிலேப் புதுப்பிக்கவும், விரிவாகக் கட்டவும் கல்கத்தா நகரத்தார் விரும்பினர் அதற்கு, கோவிலின் இடப்பரப்புப் போதியதாக இல்லே. எனவே அக்கோவிலருகே காசி மஹாராஜா அவர்களின் இடத்தையும் கோவிலுக்குப் பெற அவர்கள் 1890 அளவில் விரும்பினுர்கள்.

அந்த மன்னர் உடனேஇசைந்து தம் இடத்தை நகரத்தார்களுக்கு "தரும சாசனமாக" பதிந்து கொடுத்தார். இதன் பிறகு திருப்பணி வேலையை நகரத்தார் தொடங்கினர். திருப்பணிக்காக அந்நாளிலே ஒரு லட்சம் ரூபாய் செலவிட்டனர் என்று தெரிகிறது. இன்றைய விலே நிலேயில் இது பதினேந்து லட்சம் ரூபாய்க்குச் சமமாகும். 1893-இல் கோவில் கட்டிமுடிக்கப் பெற்றது. 1908-இல் வெள்ளித் திருவாசி செய்யப்பெற்றது. திருமாங்கல்யம், மகரி, பதக்கம் முதலியனவும் செய்யப் பெற்றன.

1934-இல் நிர்வாகம் இரங்கூனுக்கு மாறிற்று. விசாலாட்சி கோவில் திருப்பணிக்கு சுபகிருது ஆண்டு தை, மாசி, பங்குனி சோபகிருது ஆண்டு சித்திரை மாதங்களில் இரங்கூனிலும்பர்மாவின் பிற பகுதிகளிலும் நன்கொடை வசூலிக்கப்பெற்றது.

இக்கோவிலில் பூசைகளே நடத்தும் உரிமைகளே நகரத்தார் காசி பிராமணராகிய பண்டாக்களிடமிருந்து எழுத்து மூலம் பெற்றுள்ளனர். இதன் பயனுக, கோவில் தமிழ் நாட்டு ஆசாரப்படி நடைபெற்று வருகிறது. அதன் ஆட்சி நகரத்தாரிடம் இருந்து வருகிறது

திருவனந்தலேப் பண்டாக்களே இன்றும் செய்து வருகின்றனர். அந்த ஒரு காலத்துக்குரிய நிவேதனம் மிட்டாய் (சர்க்கரைம் தாம்பாள வருமானத்தையு).

நகரச் சத்திரத் தொடர்பில்லாமல் நேரடியாகச் செய்யப்படும் அபிடேகங்களின் வருவாயையும் அவர்களே அடைகின்றனர்.

பண்டாக்களின் வீடுகளை, கல்கத்தா நகரத்தார் விலைக்கு வாங்கிப் பத்திரம் பதிந்துள்ளனர். அவர்களே அவற்றில் தொடர்ந்து குடியிருந்து வரவும் இசைவு வழங்கியுள்ளனர்.

மூலவராகிய விசாலாட்சி தவிர உற்சவ விசாலாட்சி, தங்கத்தினால் முலாம்பூசிய சொர்ண விசாலாட்சி திருவுருவங்களும் உள்ளன.

விநாயகர், சிவலிங்கம், பாலதண்டாயுதபாணி, சண்டிகேசுவரி, நவக்கிரகங்கள் ஆகிய திருவுருவங்களும் இக்கோவிலில் வைத்து வழிபடப் பெறுகின்றன.

நாள்தோறும் காலை 10-30 க்கு காலைப் பூசையும், மாலை 6 மணிக்குச் சாயரட்சையும் நடைபெறுகின்றன. நகரத்தார்கள் நியமிக்கும் தமிழ் நாட்டுப் பிராமணர் இந்தப் பூசைகளைச் செய்து, சுத்த அன்னம் படைக்கின்றனர்.

ஒரு காலம் மட்டுமே அபிடேகம் உண்டு. அதற்கென நல்லெண்ணெய், பால், தயிர், தேன் பஞ்சாமிர்தம், பன்னீர் ஆகியவற்றுடன் பழுப்புச்சீனி, சந்தனம், திருநீறு, குங்குமம், அத்தர், பூ, நெய்விளக்கு ஆகியவையும் நகரச் சத்திரத்திலிருந்து அனுப்பி வருகின்றனர்.

மாலை 5 மணிக்கு, ஒரு சாஸ்திரிகள் நாள் தோறும் தேவி மகாத்மியப் பாராயணம் செய்விக்கிறார்

செவ்வாய்க்கிழமைகளிலும் வெள்ளிக் கிழமைகளிலும் சாயரட்சைப் பூசையில் மேளம் வாசிக்கப் பெறுகிறது. திருவிழாக் காலங்களிலும் மேளம் முழங்குகிறது.

ஆடி, தை மாதங்களில் வெள்ளிக் கிழமைகளில் விசாலாட்சி அம்மனுக்குச் சகஸ்ர நாம அர்ச்சனை செய்யப்படுகிறது. மகா சிவராத்திரியன்று நான்கு கால அபிடேகம் நிகழ்கிறது.

உற்சவ மூர்த்தியாகிய விசாலாட்சி அம்மனுக்குப் பௌர்ணமி தோறும் அபிடேகம் உண்டு.

நவராத்திரி விழா, இக்கோயிலில் பெருஞ் சிறப்புடன் கொண்டாடப் படுகிறது. 10 நாட்களும் அம்மனுக்கு வெள்ளி அங்கியும், தங்கக்கவசமும் அணிவிக்கப் பெறும். சகஸ்ரநாம அர்ச்சனை செய்யப்படும். கோயிலுக்கு வருபவர்களுக்குச் சுண்டல் வழங்கப் பெறும்.

மகார் நோன்பு எனப்படும் விஜயதசமி நாளில் மூலஸ்தானத்தில் தங்க விசாலாட்சி எழுந்தருளிக் கையில் ரத்ன வேலாயுதம் ஏந்தியிருக்கும். உற்சவ விசாலாட்சி குதிரை வாகனத்தில் அமர்ந்து அம்பு எய்வது வழக்கம். காசிமாநகர் வீதிகளில் வலம் வந்து அம்பு போடுவது வழக்கமாக இருந்தது 1942-இல் கலகங்களால் அந்த ஆண்டில் நகரில்

உலாச் செல்லுவது கைவிடப் பெற்றுக் கோயிலுக்குள்ளேயே விழா நடந்தது. தொடர்ந்து இந்நிலையே நீடித்து வருகிறது.

விஜயதசமியன்று கோவிலுக்கு வருபவர்களுக்குச் சர்க்கரைப் பொங்கலும் வடையும் வழங்கப் பட்டு வருகின்றன.

தீபாவளியன்று தொடங்கி மூன்று நாட்களுக்குச் சொர்ண விசாலாட்சியை நகரச் சத்திரத்தில் கொண்டு வந்து அலங்கரித்து வைப்பது அண்மையில் வழக்கமாக இருந்து வருகிறது. இதற்குரிய பூசை முதலிய செலவுகளுக்காக வலையபட்டி அ. நா. நாகப்ப செட்டியார் அவர்கள் ஆண்டு தோறும் 101 ரூபாய் கொடுத்து வருகிறார்கள்.

கடைசியாக 1908-இல், பிலவ ஆண்டு தை 25-இல் கும்பாபிடேகம் செய்து வைக்கப் பெற்றது. ஆற்றல் மிக்க இந்த அம்மனின் புதிய திருவுருவம் நிலைநாட்டப் பெறுவதுடன் திருப்பணி வேலையும் நடைபெற்றுக் குடமுழுக்கு விழாவும் 1971-இல் சிறப்பாக நடைபெற்றது.

எங்கும் நிறைந்து பெருங் கருணை பொழிந்து அனைத்து உயிர்களையும் காக்கும் அன்னை விசாலாட்சியின் கனிந்த அருட்பார்வையில் உலக மக்கள் எல்லோரும் நலமெல்லாம் பெற்றுச் சீரும் சிறப்பும் அடைவார்களாக!

# மதுரைக் கோயிலில் நகரத்தார் திருப்பணி

கவிஞர் அரு. சோமசுந்தரன், எம். ஏ

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பது பழமொழி. "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று பெரியோர்கள் கூறுவர். "எல்லாம் அவனருள்" என்ற கொள்கையில் ஆழ்ந்த நம்பிக்கையுடைய தமிழ் மக்கள் அவனருளாலே அவன் தாள் வணங்கினர்.

இறைப்பணியையே தம் வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்ட நகரத்தார்கள் திருப்பணி புரிவதில் சிந்தை செலுத்தினர். சோழ வேந்தர்களும், நாயக்க மன்னர்களும் விட்டுப்போன திருப்பணிகளைத் தொடர்ந்து நிறைவேற்றிய பெருமை நகரத்தார்களையே சாரும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டு முதல் நகரத்தார்கள் திருப்பணி செய்வதில் ஈடுபட்டனர். மாபெரும் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலைப் புதுப்பித்துப் பல சீர்திருத்தங்கள் செய்து குடமுழுக்கு நடத்துவித்த வள்ளல் திரு வயிநாகரம் நாகப்ப செட்டியார் அவர்களே ஆவார்.

நகரத்தார்களிடையே முதன் முதலாக இத்தகு மாபெரும் திருப்பணியில் ஈடுபட்டு வழிகாட்டிய சான்றோர் அவரே ஆவார் என்று பெரியோர் பலர் கூறுகின்றனர்.

நகரத்தார்கட்கு உரிய 96 ஊர்களில் அமராவதி புதூர் என்பதும் ஒன்று. அது காரைக்குடிக்குக் கிழக்கே மூன்று கல் தொலைவில் உள்ளது.

அங்கு வயிநாகரம் இராமநாதன் செட்டியார் என்ற பெரியார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு நாகப்பன், வெங்கடாசலம், அண்ணாமலை, சுப்பிரமணியன் என்ற நன்மக்கள் நால்வர் தோன்றினர்.

அவர்களுள் மூத்தவர்களான நாகப்ப செட்டியாரும், வெங்கடாசலம் செட்டியாரும் வாணிகம் செய்யும் பொருட்டு மதுரைக்குச் சென்றனர். மீனாட்சி அம்மன் கோயிலுக்கு அருகே உள்ள சடாமுனி தெருவில் நூல் வியாபாரமும், ஜவுளி வியாபாரமும் செய்தனர். காலப் போக்கில் செல்வம்

குவிந்தது. "எல்லாம் மீனாட்சி அம்மனின் அருள்" என்ற கருத்துடையராய் இருந்த சகோதரர்களின் கவனம் கோயிலின் பக்கம் திரும்பியது.

அந்நாளில் மீனாட்சி கோயில் பெருமளவு பழுதடைந்து காணப்பட்டது. ஆலயத்தில் ஒளியில்லை. ஒரே இருள்! தேள், நட்டுவாக்காலி, பாம்பரணை, பெருச்சாளி, உண்ணி, சுண்டெலி முதலிய உயிர்ப்பிராணிகள் யாண்டும் நடமாடின! தளவரிசைகள் தகர்ந்தும் பிளந்தும் இருந்தன. மண்டபக் கால்கள் சாய்ந்து காணப்பட்டன. சுருங்கச் சொன்னால் "என் கோயிலைப் புதுப்பிப்பார் எவருமே இல்லையா?" என்று மீனாட்சி அன்னையே இரங்கிக் கேட்கும் துயரநிலை தோன்றியிருந்தது.

நாள்தோறும் மீனாட்சி அம்மன் கோயிலுக்குச் சென்று அன்போடு வழிபடும் நாகப்பச் செட்டியாருக்குக் கோயிலின் பழுதுபட்ட நிலை வருத்தத்தை உண்டு பண்ணியது. எனவே, தம் தம்பியரைக் கலந்தாலோசித்தார். மன்னர்களே முற்காலத்தில் செய்து முடித்த மாபெரும் திருப்பணியில் இறங்கினார். அவருக்கு துணிவிருந்தது.

தம் முயற்சி திருவினையாகும் என்பதில் அவருக்கு ஐயமில்லை; அதனால் அளவு கடந்த ஆர்வம் இருந்தது. அம்மனின் அருள் மிகுதியும் இருந்தது. செயல்கள் விரைந்து நடந்தன.

முதலில் சித்தி விநாயகர் கோயில் திருப்பணி இனிது முடிந்தது. பின்னர் முதற் பிரகாரத்தில் சாய்ந்திருந்த மதில் திருத்தம் செய்யப் பெற்றது. திருப்பள்ளியறை புதுப்பிக்கப் பெற்று ஊசலுக்குப் பொற்றகடு போர்த்தப் பெற்றது. கோயில் முழுவதிலும் தட்டோடுகள் பழுதுபார்க்கப் பட்டன. மண்டபங்களின் இடைகளில் பலகணிகள் அமைக்கப் பெற்றன.

எனவே ஆலயத்தில் செறிந்து கிடந்த இருள் நீங்கி ஒளி புகுந்தது. கோபுரத்தில் அடைந்து கிடந்த குரங்குகள் பெருஞ்செலவில் தந்திரமாக அப்புறப்படுத்தப்பட்டன. பன்னிரண்டு கோபுரங்களுக்கும் சுதை வைத்து வண்ணந் தீட்டப் பெற்றது. அதற்கு மட்டும் செலவு எட்டு இலட்சம் ரூபாய்.

பின்னர் திருமதிலைச் சுற்றியிருந்த கழிவிடங்கள் தூய்மைப் படுத்தி, நந்தவனம் அமைத்து கம்பி வேலி பொருத்தப் பெற்றது. இவ்வாறு சித்திரை வீதியைச் சீர்திருத்த ஆன செலவு ஒரு இலட்சம் ரூபாய் ஆகும்.

அதன்பின் பதினாறு கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், ஆட்ட சத்தி மண்டபம், பசுந்தொழு மண்டபம், ஆனைமால் மண்டபம், கிளி மண்டபம், வசந்த ராயர் மண்டபம், முத்துராமலிங்கையர் மண்டபம், கழுவேற்று மண்ட

பம், துவசத்தம்ப மண்டபம் ஆகியவை புதுப்பிக்கப் பெற்றன. திருக்கல்யாண மண்டபம் அழகான முறையில் புதிதாகக்கட்டப் பெற்றது. அம்மண்டபத்தில் நிலைக்கண்ணாடி முதலிய அழகுப் பொருள்கள் வைக்கப் பெற்றன.

தெப்பக்குள மைய மண்டபம், பொற்றாமரைக் குளத்தங்கரைத் தளவரிசைகள், படித்துறைகள், கைப்பிடிச்சுவர்கள், ஆடிவீதிகளின் தள வரிசைகள் ஆகியன செப்பனிடப் பெற்றன.

சுவாமி கோயில் முதற்பிரகார, இரண்டாம் பிரகாரத் தள வரிசைகள் புதிதாகப் போடப்பெற்றன. சுவாமிக்கும் அம்மனுக்கும் தங்க விமானங்களும், தங்கத்தாலும் வெள்ளியாலும் ஆன திருவாபரணங்களும் செய்யப் பெற்றன. திருவிளையாடற் புராணச் சித்திரங்கள் கண்கவர் வனப்பினவாய்த் தீட்டப்பெற்றன. நிறைவு பெறாதிருந்த மொட்டைக் கோபுரம் சொக்கேசன் திருவருளால் முழுக்கோபுரம் ஆக்கப்பெற்றது.

ஏறத்தாழ 25 இலட்சம் ரூபாய் செலவில் மாபெரும் திருப்பணியை இனிதே செய்துமுடித்த நாகப்பச் செட்டியார் 6. 2. 1878-இல் கும்பாபிடேகம் நடத்தி மகிழ்ந்தார். நாடெல்லாம் அவருக்கு நன்றி செலுத்தியது! அம்மனும் அகங் களித்தாள்!!

நாகப்பச் செட்டியாரும் அவர்தம் இளவல் வெங்கடாசலம் செட்டியாரும் செய்த திருப்பணிப் பெருமையைக் கீழ்க்காணும் பாடலால் அறியலாம்.

சீர்செய்த சித்திரைவீ திகள் நான்குக்
குட்பட்ட தெய்வக் கோவில்
ஆர்செய்தது? அரைக்காசு பெறும்கதவா
ணியும்பிறர்வந் தடித்த துண்டோ?
பேர்செய்த நாகப்ப பாண்டி யனும்
அவனுடனே பிறந்த கீர்த்தி
வேர் செய்த வேங்கடா சலச்செழிய
னும்செய்த விளங்கி னூரால்.

பின்னர் நாகப்பச் செட்டியாரைப் பின்பற்றித் தேவகோட்டை முத்து கரு. வெ. அழகப்பச்செட்டியாரவர்கள் மதுரைக் கோயில் ரிசிவராக இருந்தபொழுது 1. 7. 1923-ல் ஒரு கும்பாபிடேகம் செய்தார்கள். கீழப்பூங்குடி சூ. ௧. சித., சு. க. அரு. குடும்பத்தார் மதுரைக் கோயிலில் பசுமடம் நிறுவி அபிஷேகத்துக்குப் பால் வழங்கி வருகின்றனர். ஒக்கூர். சி. கரு. சி. லெ. குடும்பத்தார் தேவாரப்பாடசாலையும், கானாடுகாத்தான் க. வெ. குடும்பத்தார் வேத பாடசாலையும் ஏற்படுத்தி இருக்கின்றனர்.



# பர்த்ருஹரியின் பொன்மொழிகள்

ஸ்ரீ. ஆர். முத்துகிருஷ்ணசாஸ்திரி

பர்த்ருஹரி என்பவர் ஸம்ஸ்கிரதத்தில் பல அரிய நூல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் 300 சுலோகங்கள்கொண்ட ஸுபாஷிதத்ரிசதி என்பது மிகப்பிரசித்தமானது.

இதில் நீதிசதகம், சிருங்காரசதகம், வைராக்யசதகம் என மூன்று பகுதிகள் அடங்கியுள்ளன.

உயர்நிலைப்பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் ஸம்ஸ்கிருதத்தைக் கற்க வசதி இருந்தவரை பெரும்பாலும் எல்லா மாணவ மாணவிகளும் இந்நூலிலிருந்து ஒரு சில சுலோகங்களையாவதுமனப்பாடம் செய்து வந்தனர். இதில் உள்ள கருத்துக்கள் எக்காலத்திலும் எல்லோருக்கும் மிக்கப் பயன் தரக்கூடியவையாதலால் அவற்றுள் சிலவற்றை இங்கு வெளியிடுகின்ரும்.

இந்நூலின் தொடக்கத்தில் ஆசிரியர் கூறுகிருர்: "இவ்வுலகில் அறிவாளிகள் நான் கூறும் பொன்மொழிகளைக் கேட்க முன்வரமாட்டார்கள். ஏனென்ருல் அவர்களுள் பெரும்பதியினருக்கு ஆசூயை அதிகம். பணம்படைத்தவர்களோ பணச்செருக்கிஞல் என்மொழிகளை இலட்சியம் செய்வதில்லை. மற்றவர்களுக்கோ நான் சொல்லுவது புரியாது. ஆதலால் அவர்களும என் பக்கமே திரும்புவதில்லை. இந்த காரணத்தால் இதுவரை என் பொன்மொழிகள் எல்லாம் என் மனதிலேயே அடங்கிக் கிடந்தன. இப்பொழுது பாக்கியமுள்ள ஒரு சிலர் இவற்றை அறிந்து பயன் பெறட்டும் என்ற எண்ணத்துடன் வெளியிட முன் வந்துள்ளேன்."

இவ்வுலகில் மனிதர்களை மூன்று விதமாகப் பிரிக்கலாம். 1. மூடர்கள், 2. பண்டிதர்கள், 3. மூர்க்கர்கள்.

எந்த நூலையும் படிக்காமல் எதையும் அறியாமல் பிறந்தபடியே இருப்பவர்கள் மூடர்கள். இவர்களுக்கு நல்ல விஷயங்களை எடுத்துரைத்தால் அவற்றை அப்படியே ஏற்றுக்கொண்டு அதற்கேற்ப நடந்து கொள்ளுவார்கள். ஆதலால் இவர்களை திருத்துவது சுலபம்.

பல நூல்களைக்கற்றும் கேட்டும் அறிவு வளர்ச்சி பெற்றவர்கள் பண்டிதர்கள். இவர்களுக்கு நல்ல விஷயங்களை எடுத்துரைத்துத் திருத்துவதென்பது மிகமிக சுலபம்.

இங்கு கொஞ்சம் அங்கு கொஞ்சமாக ஏதோ சிறிதளவு அறிவைப் பெற்றதனாலேயே தம்மை எல்லாங் கற்றவர்களாகக் கருதிக் கொள்ளுகின்றவர்கள் மூர்க்கர்கள். இவர்களுக்கு ஒரு விஷயத்தை எடுத்துரைத்திருத்து வதுதான் மிகமிகக் கடினம். எல்லாம் வல்ல நான்முகனாலும்கூட அவர்களைத் திருத்த இயலாதாம்'

உலகில் இந்த ரகத்தைச் சேர்ந்தவர்களின் வளர்ச்சியை முதலில் தடுக்கவேண்டும் என்ற நோக்கத்துடனேயே ஆசிரியர் இவர்களைப் பற்றியே முதல் பத்து சுலோகங்களை எழுதி இருக்கின்றார் போலும்.

முதலையின் வாயில் கூர்மையான பற்களுக்கிடையில் உள்ள ஒரு மணியை எப்படியாவது எடுத்தாலும் எடுக்கலாம். ஓங்கி வீசும் அலைகளால் கொந்தளிக்கும் கடலைக் கடந்தாலும் கடக்கலாம். சினங்கொண்ட கொடிய சர்ப்பத்தைப் பிடித்து மாலை போல் தலையில் அணிந்தாலும் அணியலாம். ஆனால் பிடிவாத குணம் படைத்த மூர்க்கர்களின் மனதைமாற்ற யாராலும் ஒரு பொழுதும் முடியாது.

ஆற்று மணலை செக்கில் போட்டு ஆட்டி எண்ணெயை எடுத்தாலும் எடுக்கலாம். கானல் நீரை அருந்தி தாகத்தைத் தணித்துக்கொண்டாலும் கொள்ளலாம். பலவிடங்களில் சுற்றித் திரிந்தால் எப்பொழுதாவது முயற் கொம்பைக்கூட அடைந்து விடலாம், ஆனால் மூர்க்கர்களின் மனதைமாற்ற யாராலும் இயலாது.

முதலையின் வாயில் கையை விட்டு மணியை எடுப்பது போன்றவை எவ்விதம் சாத்தியமில்லையோ அவ்விதமேதான் மூர்க்கர்களின் மனத்தைத் திருத்துவதும் என்ற கருத்தையே கவி இவ்வாறு வெளியிடுகின்றார்.

# ஆலயங்களில் திருவிழா

## எஸ். நடராஜன்

அநேகமாக எல்லா ஆலயங்களிலும் ஆண்டுக்கு ஒரு முறை பிரம்மோத்ஸவம் நடைபெறுகிறது. பங்குனி சித்திரை மாதங்களில் பெரும்பாலான ஆலயங்களில் உத்ஸவம் பத்து நாட்கள் நடைபெறும். சிதம்பரத்திலும் ஸ்ரீரங்கத்திலும் மார்கழி மாதமும், திருவண்ணாமலையில் கார்த்திகை மாதமும், கும்பகோணத்தில் மாசி மாதமும் இந்த விழா நடைபெறுகிறது.

பத்துத் தினங்களிலும் காலையிலும் மாலையிலும்ஸ்வாமியைப்பல வாகனங்களில் வைத்து வீதி வலம் கொண்டு வருவார்கள். தேர்த் திருவிழாவும் நடைபெறும். இதற்கெல்லாம் தத்துவார்த்தங்கள் உண்டு. அவற்றை விளக்குவதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

ஆலயங்களில் திருவிழ என்றால் அதன் முக்கிய அங்கங்களாகப் பதினெட்டுச் சடங்குகள் செய்ய வேண்டும். அவை வருஷயாகம், துவஜாரோகணம், பிருஹத்தாளம், அங்குரம், யாகசாலை அமைத்தல், அஸ்த்ரயாகம், பலிதானம், யானக்ரமம், பரிவேஷம், நீரரஜனம், கௌதுகம், தீர்த்த ஸங்க்ரஹணம், சூர்ணோத்ஸவம், தீர்த்தகம், அவரோஹணம், ஸ்நபனம், திருக்கல்யாணம், பக்தோத்ஸவம் ஆகியவை.

விநாயகர் உத்ஸவத்தன்று சண்டிகேசுவரர் மண் எடுத்துப் பிள்ளையார் பிடித்துப் பூஜை செய்து உத்ஸவத்தை விக்கினமில்லாமல் நடத்தித் தரவேண்டும் என்று பிரார்த்திக்கிறார். பாலிகை தெளித்து முளை விடச் செய்யும் சடங்கும் அன்றே நடைபெறுகிறது. இதுவும் மறுநாள் கொடி ஏற்றுதலும் கடவுளின் சிருஷ்டித் தொழிலைக் குறிக்கின்றன.

வாகனங்களில் ஸ்வாமியை எழுந்தருளச் செய்வது, யாகசாலை அமைத்து யாகம் செய்வது, பலியிடுவது ஆகியவை ஸ்திதி (காப்பாற்றும்) தொழிலைக் குறிக்கின்றன.

தேர் உத்ஸவம், பரிவேட்டை, நடராஜர் உத்ஸவத்தில் சாந்து அளிப்பது ஆகியவை இறைவனின் சம்ஹாரத் தொழிலைக் குறிக்கின்றன. திரிபுர தகனம் செய்ய இறைவன் முனைந்தபோது எல்லாத் தேவர்களும் தேரின் அங்கங்களாக இருந்து பணி செய்தனர். பிரம்மதேவர் இந்தத் தேரை ஓட்டினார்.

கடைசி நாளன்று வாத்திய முழக்கங்கள் இல்லாமல் முக வீணையுடன் பவனி வருவது கடவுளின் திரோதானம் (மறைத்தல்) என்ற செயலைக் குறிக்கிறது.

மட்டையடி, பந்தம்பறி (திரு ஊடல்) உத்ஸவங்கள் இறைவனின் அருளல் தொழிலைக் குறிக்கின்றன.

இந்த ஐந்து தொழில்களையும் இறைவன் செய்து வருகிறார் என்பதை உணர்த்தவே இந்தத் திருவிழாக்களை நடத்துகிறார்கள்.

இவற்றில், துவஜாரோசணம் அல்லது கொடியேற்றம் மிகவும் முக்கியமானது. இதன் தத்துவத்தை அறிய, கோவிலின் அமைப்பைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டும். 'ஊனுடம்பே ஆலயம்' என்ற பெரியோர் வாக்கின்படி கோவில்கள் அமைக்கப் பட்டுள்ளன. கர்ப்பக்கிருகம் - மூலாதாரம்; அர்த்த மண்டபம் - ஸ்வாதிஷ்டானம்; மகா மண்டபம் – அநாகதம்; அலங்கார மண்டபம் - விசுத்தி; சபா மண்டபம் - ஆக்ஞை. இதேபோலப் பஞ்சப் பிரகாரங்களாகிய ஐந்து ஆவரணங்களும் பஞ்ச கோசங்களைக் குறிக்கும்.

முதல் ஆவரணம் - அன்னமய கோசம்; இரண்டாவது - பிராணமய கோசம்; மூன்றாவது - மனோமய கோசம்; நான்காவது- விஞ்ஞானமய கோசம்; ஐந்தாவது - ஆனந்தமய கோசம். அநேக ஆலயங்களில் எல்லா ஆவரணங்களையும் குறிக்க ஒரே ஒரு பிராகாரம் மட்டுமே இருக்கும். இந்த அமைப்பை விளக்கவே திருமூலர்,

உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பே ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே!

என்று பாடியுள்ளார்.

கொடிமரம் உடம்பில் ஸுஷும்நா நாடி செல்லும் வழியாகிய வீணைத்தண்டைக் குறிக்கும். இந்தத் தண்டு (முதுகெலும்பு) 33 வளையங்களைக் கொண்டது. கொடிமரத்திலும் சாதாரணமாக 33 வளையங்கள் இருப்பதைக் காணலாம். வீணைத் தண்டு மூலாதாரத்திலிருந்து பிரம்மரந்திரம் வரை இருப்பது போலக் கொடிமரமும் மூல லிங்கத்தின் மட்டத்திலிருந்து விமானத்தின் மேலுள்ள ஸ்தூபியின் அளவு வரை இருக்கும். குண்டலினி சக்தி, ஸுஷும்நா நாடிவழியாக ஏறிப் பிரம்மரந்திரத்தை அணுகுவது போலக் கொடி மரத்தில் விருஷபக் கொடி அல்லது கருடக் கொடி ஏற்றப்பட்டு விழா ஆரம்பமாகிறது.



ஹிந்து ஆலயங்களில் அந்நியரை விடலாகாது

# ஸ்ரீ வைஷ்ணவ மகாநாட்டு கோரிக்கை

47வது ஸ்ரீ வைணவ மகா நாடு திருச் சித்திரக்கூடம் தி. கோ. ராமானுஜதாசர் தலைமையில் கோவிந்தப்ப நாயக்கன் தெரு உப்பட்டுரு ஆழ்வார் செட்டியார் ராமானுஜ கூடத்தில் நடந்தது.

திரு ராமானுஜ தாசர் தலைமை வகித்துப் பேசுகையில், ஸ்ரீ வைஷ்ணவ நூல்களைப் படிப்பகங்கள் மூலம் பரப்புவது சிறந்த கடமையாகும் என்று கேட்டுக்கொண்டார். ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் வைஷ்ணவ சமயக் கொள்கைகளை மக்கள் வாசித்து யறிய உதவும் வகையில் நூல் நிலையங்கள் இருக்க வேண்டும் என்ருர்.

இளைஞர்கள் மதத்தின் சீர்மையை உணர்ந்து கடைப்பிடிக்கும்படி பிரசாரம நடத்தவும் புத்தக வெளியீடுகளும செய்யக் கோரினர்.

முன்னுள் போலீஸ் கமிஷனர் பார்த்தசாரதி அய்யங்கார் மகாநாட்டைத் துவக்கி வைத்தார்.

ஸ்ரீ வைஷ்ணவ மகா சங்கத்தின் தலைவராகவிருந்த காலஞ் சென்ற கே. வேங்கடசாமி நாயுடுவின் உருவப்படத்தை முன்னுள் பிரதம நீதிபதி டாக்டர் பி. வி. ராஜமன்னுர் திறந்து வைத்தார்.

சங்கத் தலைவர் எம். ராதா கிருஷ்ண பிள்ளை வரவேற்ருர்.

42வது வைணவ மாதர் மகாநாடு திருமதி ஜமுனு கமலக்கண்ணன் தலைமையில் நடந்தது.

சங்கப் பொதுக் காரியதரிசி சி. சஞ்சீவி நாயுடு நன்றி கூறினர்.

திர்மானங்கள்

ஹிந்து ஆலயங்கள், மடங்கள், சமய நிறுவனங்கள் பராமரிப்புக்கும், நிர்வாகத்துக்கும் டாக்டர் சி. பி, ராமசுவாமி அய்யர் அற நிலையக் கமிஷன் சிபாரிசுகளை செயலபடுத்துமாறு இந்திய சர்க்காரைக் கோரும் தீர்மானம் நிறைவேறியது.

ஹிந்து ஆலயங்கள் வேடிக்கை பார்க்கும் இடங்களல்ல வென்றும், ஹிந்து சமயத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் ஆராதிக்கும் இடமென்றும், அதனுல ஹிந்துக்களல்லாதவர்களை ஆலயங்களில் அனுமதிக்கக் கூடாதென்றும் தீர்மானம் நிறைவேறியது.

ஸ்ரீ வைஷ்ணவப் பெருமாள்களையும், ஆழ்வாராசார்யர்களையும், நாமங்களையும் இழிவு படுத்தும் வகையிலும, நகைப்புக்குள்ளாக்கும்படியும் படங்கள் காட்டுவதை அனுமதிக்கலாகாது என்று தணிக்கை போர்டைக் கேட்டுக் கொண்டது.

ஆலயங்களுக்கருகில் கள்ளு, சாராய, மதுபானக் கடைகள்

வைக்கக் கூடாது. பண்டிகை நாட்களில் கடைகள் மூடப்பட வேண்டும். கடைகளுக்கு தெய்வங்கள் பெயர் வைக்கலாகாது என்று மகாநாடு கோரியது.

வைகுண்ட ஏகாதசிக்கு அரசாங்க விடுமுறை வேண்டும். ஸ்ரீரங்கம் அரையர் சேவையை அ. இ. ரே. ஒலிபரப்ப வேண்டும். சங்கீதசபைகள் கச்சேரிகளில் ஆழ்வார்கள் பாட்டுகளுக்கு போதிய அவகாசம் தர வேண்டும்.

ஆலயங்களில் பிரசாதங்கள், தீர்த்தம் விநியோகத்தில் ஜாதி அல்லது பெண்பால் வித்யாசம் பார்க்கலாகாது.

முக்கிய ஆலயங்களில் படிப்பகங்கள் வைக்க மாநில அரசு உறுதி செய்ய வேண்டும்.

ஸ்ரீ வைஷ்ணவ ஆலயங்கள், மடங்கள், சமய நிறுவனங்கள் நிதிகளை பிற சமயப் பிரசாரத்துக்கு உபயோகிக்கலாகாது.

கோவில்களில் சிலைகள், நகைகள் திருட்டைத் தடுக்க தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.



# ஆன்மநேய ஒருமைப்பாடு

திருவருட் பிரகாச வள்ளலார்

உலகம் முழுவதையும் ஒன்று படுத்தும் ஆன்மநேய ஒருமைப் பாட்டினுக்கே யன்றி, இந்திய நாட்டில் — மொழி வழி இனங் களிடையே சகோதர உணர்வை வளர்த்து, அவற்றிடையே உணர்ச்சி பூர்வமான ஒருமைப் பாடு காண வேண்டும்.

உயிர்கள் அனைத்தையும் சம மாகக் கருதி, அவற்றிடையே இரக்க உணர்வும் தயையும் காட் டத்தக்க ஜீவகாருண்ய ஒழுக் கத்தை மக்களுக்குப் போதிக்க வேண்டும்.

சாதி — சமய — வருண பேதங் களை அறவே விடுத்து, மொழி வழிப்பட்ட இனங்கள் நாடுகளி டையே ஒற்றுமை கண்டு, ஆன்ம நேய ஒருமைப்பாட்டினை உரு வாக்க வேண்டும்.

பணக்காரர் — ஏழை என்ற பொருளாதார ஏற்றத்தாழ்வைத் தொலைத்து, எல்லோரும் வயிருர உண்டு, உடம்பார உடுத்து வாழும் சமதர்ம சமுதாயத்தைப் படைக்க வேண்டும்.

ஆண் — பெண் என்ற பால் வேற்றுமையின்றி, மக்கள் எல் லோருக்குமே கல்வி அளிக்க வேண்டும். குறிப்பாக, ஞான மார்க்கக் கல்வியைப் பெண்களுக் கும் அளித்தல் வேண்டும்.

உலக மக்கள் உய்வதற்கான முன்னேறும்படியான செயல் களைச் செய் என்று கட்டளையிட்டு எனக்கு அருள் செய்து, என் உயி ரோடு இணைந்து நிற்கும் இரக்க மாகியப் பேரொளியே! மண்ணு லகில் உள்ள எல்லா உயிர்க் கூட் டங்களும், என்னுடைய உயிரும் ஒன்றுதான்; ஏனைய உயிர்களுக் கும், என்னுடைய உயிருக்கும் எவ்வித வேற்றுமையும் இல்லை. இவ்வுண்மையை எண்ணி எல்லா உயிர்க்கும் இன்பம் அடையும்படி யான செயல்களையே செய்ய வேண்டும்.

அப்பனே! யான் பலமுறையும், பலநாளும் வேண்டுகின்ற வேண்டு கோளைக் கேட்டு, எனது வேண்டு கோளின்படி நடப்பதற்கு இடங் கொடுக்க வேண்டும். அந்த வேண்டுகோள் யாதெனில் மண் ணுயிர்கள் அனைத்தும் மகிழ்ச்சி அடையும் வகையில் அவைகள் நன்மை பெறும்படி, நான் அன் போடு பணிபுரிய வேண்டும். இது தான் எனது வேண்டுகோள்.

மண்ணுலகில் மாபெரும் பொன் படைத்த பணக்காரர்கள் ஏழைகள், பெண்கள், தம்மை உயர்ந்தவர்கள் என்று சொல்லித் திரியும் ஆண்கள், இவர்களுக்கு ஒரு நோய் உண்டு. இந்நோய் காரணமாகவே இவர்களெல்லாம் வாழ்க்கையில் ஒற்றுமையடையவில்லை: அன்பு கொள்ளவில்லை; இன்பம் அடையவில்லை. வாழ்க்கைத் துன்பத்தால் உயிர் துடிக்கிறார்கள். அந்நோய் எதுவெனில் 'தன்னை அறியாமை' என்னும் நோய்தான்.

வஞ்சத்தோடு கூடிய துன்ப வாழ்க்கையை ஒழித்து, அருளற நெறியில் இன்பமாக வாழ்வதை விரும்பி, ஒன்றாகி வாழ்வதில் விருப்பமடைந்து, உலகம் முழுவதும் ஒன்றாகிக் களிப்படைந்து வாழும் நிலை என்றுதான் வருமோ?

உலகீரே! நீவிர் வட்டிக்குமேல் வட்டி போட்டு வாங்குகிறீர்கள்; பணத்தை மேலும் மேலும் பெருக்குகிறீர்கள்! உண்மையாக இந்த உடலைப் பெற்றதற்கான லாபத்தை வளர்க்கின்ற மார்க்கத்தை அறியாமல் இருக்கின்றீர்கள். பணப் பெட்டி மேல் பணப் பெட்டியை அடுக்கி வைத்துக் கொண்டிருக்கின்றீர்கள். உங்கள் வயிற்றுப் பெட்டியை மாத்திரம் சோற்றால் நிரப்பிக்கொண்டு விட்டுக்குள் இருக்கின்றீர்கள். பட்டினியால் வருந்துவோர் முகத்தைப் பார்ப்பதற்குக்கூட சம்மதப்பட மாட்டீர்கள். உண்ண முடியாமல் புளித்துப்போன பழங்கஞ்சியைக் கூட அவர்களுக்கு ஊற்றச் சம்மதிக்கமாட்டீர்கள். ஒன்றுக்கும் உதவாத எட்டி மரம் போலப் பிறர்க்குத் தீமை செய்து வாழ்கின்றீர்கள்; எவ்வளவு பாவத்தைப் பெறுகின்றீர்கள்; பித்து மனம் கொண்ட மக்களே! இவ்வாறு செய்யலாமா?

எளியவர்களின் விளை நிலத்தை பணத்தால் கவர்வது பாதகமான செயல். உழவர்களின் நிலம் பணக்காரர்கள் வசம் ஆகாமல் தடுக்கவேண்டும்.

மூடத்தனத்திலே மூழ்கிக் கிடந்த மக்கள் இன்று அறிவு பெற்று வாழ்கின்றார்கள். கோழைத்தனத்தால் செத்துக் கிடந்தவர்கள் ஒவ்வொரு நாளும் திடம் பெற்றுத் தமது உரிமைக்காகப் போராடப் புறப்படுகின்றனர்.

புலால் உண்ணுதல், தெய்வத்திற்கு உயிர்ப்பலி தருதல் ஆகிய தீய பழக்க — வழக்கங்களையும், மற்ற மூட நம்பிக்கைகளையும் அடியோடு ஒழிக்கவேண்டும்.

உழைப்பின்றி ஊதியம் விரும்பாதவனும், பிற பெண்கள் வலிந்துவரினும் வெறுப்பவனும், பிறர் வறுமையையும், துன்பத்தையும் தன்னுடையதாக எண்ணி வருந்து

பவனும், பிறர் புகழையும் சந்தோஷத்தையும் பார்த்து, கேட்டு ஆனந்திப்பவனும் ஆகிய இவர்களது உள்ளத்தில் இறைவன் நடமாடுகிறார்!

மெதுவாகப் பேசு; அது உன் ரகசியங்களைப் பாதுகாக்கும். நல்ல எண்ணத்தோடு இரு; அது உன் நடத்தையைப் பாதுகாக்கும்; உண்மையே சொல்லு; அது உன் வார்த்தைகளைப் பாதுகாக்கும். கலந்து யோசனை செய்; அது உன் சிந்தனையைப் பாதுகாக்கும்.



# "யோகாசனங்கள்" ஏன் செய்ய வேண்டும்



செயலாளர் : யோகாசன ஆலயம் சென்னை-33

யோகாசனங்களின் மேன்மையைப் பற்றி பல சான்றோர்கள் கருத்துக்கள் தெரிவித்துள்ளார்கள். அவ்வற்றுள் சிலருடைய கருத்துக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. முன்னாள் பாரதப் பிரதமர் பண்டித ஜவர்ஹர்லால் நேரு அவர்களின் ஆரோக்கிய ரகசியம்.

யோகாசன பயிற்சிகளை நான் கொஞ்சம் செய்து வருகிறேன்; இவ்வளவு வருஷம் நான் நல்ல ஆரோக்கியமாக இருப்பதற்கும் வியாதிகள் வராமல் இருப்பதற்கும் யோகாசனப் பயிற்சிகள் உதவியுள்ளன.

யோகாசனப் பயிற்சியினால் அலுப்பு ஏற்படுவதில்லை. உடம்பு லேசாக இருப்பதுபோல் தோன்றுகிறது. சிரசாசனம் செய்வதால் எனக்கு நல்ல பலன் கிடைத்திருக்கிறது. அனைவரும் சில சுலபமான ஆசனங்களையாவது செய்து வர வேண்டும். நவீன உடற்பயிற்சியாளர்கள் யோகாசனப் பயிற்சியை விஞ்ஞானத்திற்கு ஒத்து வராதென்று கருதி ஒதுக்கிவிடக் கூடாது. யோகாசனங்களினால் உடல் உறுப்புகளில் ஏற்படும் விளைவுகள் இன்னமும் முழுமையான விஞ்ஞான முறையில் ஆராய்ந்து அறியப்படவில்லை.

0 0 0

பூதான இயக்கத்தைச் சார்ந்த திரு ஜெயபிரகாஷ் நாராயணன் அவர்கள்:

யோகாசன முறைக்கு விஞ்ஞான உருக்கொடுப்பது தற்கால வைத்திய சாஸ்திர நிபுணர்களின் கடமை. குழந்தைப் பருவ முதல் யோகாசனம் பயின்றால் 90 சதவிகிதம் நோய்களை வராமல் தடுத்து விடலாம். யோகாசன முறை உடற்கட்டுப் பாட்டையும் மனக்கட்டுப் பாட்டையும் ஏற்படுத்துகிறது. டாக்டர்களுக்காக சர்க்கார் செலவிடும் பணத்தில் ஒரு சதவிகிதத்தை யோகாசன பயிற்சிக்காகச் செலவிட்டால் கூட நாட்டின் பொது சுகாதார நிலை மிகவும் உயர்வாக இருக்கும். யோகாசனப் பயிற்சி குறிப்பிட்ட சிலருக்கு மாத்திரம் ஏற்பட்டதல்ல. ஜாதி, மத பேதமின்றி அனைவரும் இதைப் பழகலாம்.

0 0 0 0 0

ஹைதராபாத் நகரில் பதஞ்சலி யோகாசன ஆராய்ச்சி நிலையத்தின் தலைவர் (ஆங்கில முறை) டாக்டர் ஜி. எஸ். மேல்கோடே ஆவர். அவர் பாராளுமன்ற உறுப்பினருமாவர். சரும நோய்கள், சிறுநீரக கோளாறு, கல்லீரல் கோளாறு, ரத்த அழுத்தம், இதய நோய், கீல் வாதம், சுவாச நோய்கள் ஆகியவைகளை யோகாசனத்தின் மூலம் குணப்படுத்தி வெற்றி கண்டுள்ளோம் என்கிறார் அவர். இந்த ஆராய்ச்சி நிலையத்தில் உயிர் நாடியாகத் திகழ்பவர் 52 வயதான யோகாசன நிபுணர் ஸ்ரீ ராமானந்தா அவர்கள், நோய்களில் 90 சதவிகிதம் யோகாசனத்தினலும் 10 சதவிகிதம் ஆயுர்வேத முறைமூலம் சிகிச்சை அளிக்கப்படுகிறது என்கிறார்.

0 0 0 0 0

26 மாதங்களாக சீனத் தலைநகர் பீகிங்கில் ஒரு தனி வீட்டில் அடைத்து வைக்கப்பட்டிருந்த 31 வயதான 'ராய்ட்டர்' செய்தி ஸ்தாபன நிருபர் திரு. அந்தோணி இரேக்கு தனது தனிமையில் வலிமையும் மன அமைதியும் அளித்தது யோகாசனப் பயிற்சிகள் என்கிறார். "சீனவுக்குப் போகும் வழியில் தற்செயலாக வாங்கிய யோகாசன பயிற்சிகள் பற்றிய புத்தகம் தான் எனக்கு விசேஷமாக அமைந்தது. 8 அடி நீளமும் 8 அடி அகலமும் உள்ள சிறு அறையில் நான் தினசரி 2 மணி நேரம் யோகப் பயிற்சி செய்தேன். இதனல் என் உடல் நலமாக இருந்ததுடன் அவ்வப்பொழுது கொந்தளித்துக் கொண்டிருந்த உள்ளத்திற்கும் அமைதி கிடைத்தது" என்று திரு அந்தோணி கூறினர்.

0 0 0 0 0

சென்னை பொது மருத்துவமனையில் பணியாற்றி ஒய்வு பெற்ற டாக்டர் திரு ரத்தினவேலு சுப்பிரமணியன் B. Sc., M. D., M. R. C. P. (London) அவர்கள் தினமும் காலையில் ஆறு மணியிலிருந்து ஆறரை வரை ஆசனங்கள் செய்கிறார். முக்கியமாக சிரசாசனம் செய்வது அவருடைய தினசரிக் கடமைகளில் ஒன்று.

"இவ்வளவு ஆண்டுகளாக எதையும் பதட்டமில்லாமல் செய்து வந்திருக்கிறேன். வீண் மன அலைச்சல் கிடையாது. எதையும் தெளிவாகச் சிந்திக்க முடிகிறது. இதற்கெல்லாம் சிரசாசனம் தான் காரணம் என்று சொல்லுவேன்" என்கிறார் அவர்,

டாக்டர் திரு ரத்தினவேலு சுப்பிரமணியன் அவர்கள் யோகாசனப் பயிற்சியை பதினைந்தாவது வயதில் ஆரம்பித்தாராம். இப்பொழுது ஐம்பத்தேழு வயது நடக்கிறது. "ஆசனப் பயிற்சியை அநேகமாக நிறுத்தியதே கிடையாது." என்கிறார் அவர்.

உடல் நலம்காக்க அனைவரும், குறிப்பாக பெண்கள் உடல் இளைக்கப் பட்டினி கிடக்கும் முறைக்குப் பதில், யோகாசனப் பயிற்சி பெற்றால் நல்ல பலனைக் காணலாம் என மேதகு தமிழக ஆளுனர் உயர்திரு. கே கே. ஷா கூறினார். ●

---

மதிப்புரை

# பக்திரச கீர்தனமாலா

(கீர்த்தனைகள்)

இயற்றியவர் : கா. விசாலாக்ஷி அம்மாள், கிடைக்குமிடம் : அக்னி கா. நாகசுந்திர சர்மா, "எழில் நிலையம்", 47, தென்னமரத்தெரு, வேலூர், N A. விலை 50 காசுகள்

உள்ளத்தை இறைவன்பால் ஒப்படைத்துத் தன்னை மறந்த பக்தி நிலையிற் பாடப் பெற்றுள்ள தன்னருட் பாடல்களை இந் நூலிற் காணலாம். பல தெய்வங்கள் மீது பாடப் பெற்றுள்ள இப் பாடல்கள், இசைவாணர்களுக்கும் பக்த கோடிகளுக்கும் பயன் தருவனதாகும். "மந்திர தரு நிழலில் சுந்தரமாயிருந்து, மங்கள வீணை கொண்டு நவரஸ ராகம் பாடிடும் ஸங்கீத ஸ்ரீ நிலையே! மாதா!" என்ற கல்யாணி ராக கீர்த்தனை மிக அற்புதமாய் அமைந்துள்ளது. முகாரி ராகத்தில் அமைந்த பாடலில், சரணத்தில் வரும் "நித்தியானந்த சுயரூபத்தைக் கண்டு கொள்ளாமல் அவித்தையுற்று, இம்மலக்கூட்டினைத் தானென்றுமே மயங்கியுழன்றேன்" என்ற அடிகள் இந் நூலாசிரியையின் பழுத்த மெய்ஞ்ஞான பக்திக்குச் சான்று பகர்வனவாகும். பரவசம் எய்த விழையும் பக்தி உலகம் இந்நூலை வரவேற்கும் என்பதில் ஐயமில்லை.

—அருளிசைக் கவிஞர் என். எஸ். சிதம்பரம்

---

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனுதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17